# கலைமகள் பிள்ளைத்தமிழ்



இரா.பிரபாகரன்



THIS BOOK

Is printed and published with the financial assistance of Tirumala-Tirupati Devasthanams under their scheme "Aid to publish religious books".

# காணிக்கை

அன்பால் அரவணைத்து
பாசத்தால் பலகல்வி தந்து
நல்வழியில் நெறிப்படுத்தி
வாழ்க்கைக்கு வழிகாட்டும்

என்

அன்பு

**அன்னைக்கு**

# கலைமகள் பிள்ளைத் தமிழ்

ஆய்வு

இரா. பிரபாகரன்
எம்.ஏ., எம்.எட்., எம்.பில்.,
ஆய்வாளர், தமிழ்த்துறை
திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி.

அச்சுதா வெளியீடு
சேர்க்காடு—அஞ்சல்
வ. ஆ. அ. மா-632 106

| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | : | டிசம்பர், 1992 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| படிகள் | : | 1000 |
| பக்கங்கள் | : | 140 |
| நூலின் அளவு | : | 12.5 × 18.5 செ.மீ |
| தாள் | : | 11.6 கி. வெள்ளைத்தாள் |
| எழுத்து | : | 11 புள்ளி |
| நூல் கட்டு | : | அட்டை |
| விலை | : | ரூ. **18-00** |
| அச்சிட்டோர் | : | **மூவேந்தர் அச்சகம்**<br>இராயப்பேட்டை<br>சென்னை-600 014 |

# அணிந்துரை


## பேராசிரியர் டாக்டர் இரா. கு. நாகு

தமிழ்த்துறைத் தலைவர், மாநிலக் கல்லூரி, சென்னை


அறிவும் ஆராய்ச்சியும் பெருகிய காலத்தில் இன்று வாழ்கிறோம். எதனையும் ஆய்வுக்கு உட்படுத்திப் பார்க்கும் காலமாக இக்காலம் திகழ்கிறது. சுவைத்துப் படிப்பதுடன் அமைதியடைந்த காலம் போய் ஆய்ந்து அலசிப் பார்க்கும் காலத்தில் வாழ்கிறோம். சுவைத்துக் கற்குங் காலம் ஆய்வுக் காலமாக இன்று வளர்ந்து உருப் பெற்றுள்ளது. சுவைத்துக் கற்றல் திறனாய்வாக அரும்பியது; பாராட்டு முறைத் திறனாய்வாகப் பின்னர் முகிழ்த்தது; இன்று பகுப்பு முறை ஆய்வுக்கு வழிகாட்டி ஒதுங்கி நிற்கிறது. சுவைத்துக் கற்றலும் திறனாய்வும் ஆய்வும் செறிந்த இக்காலம் எதனையும் ஆய்வுக் கண்ணோடு பார்த்து மதிப்பீடு செய்து வெளியிடத் தூண்டு கிறது. அத்தகைய தூண்டுதலுக்கு ஆட்பட்டவர்தான் இந்நூலாசிரியர் திரு. பிரபாகரன் அவர்கள்.

திரு. பிரபாகரன் கலைமகள் பிள்ளைத்தமிழ் என்னும் நூலை சுவைத்துப் படித்திருக்கிறார்; சுவைத்து மகிழ்ந்திருக் கிறார்; மகிழ்ந்து நூலின் திறன்களை மதிப்பீடு செய்து பார்த்திருக்கிறார்; மதிப்பீடுகளை வகை தொகை செய்திருக் கிறார். அதனால் ஆய்வு முகிழ்த்திருக்கிறது. ஆய்வின் பயன் இந்நூலாக முகிழ்த்திருக்கிறது. இந்த உண்மைகளை இந்நூல் கற்போர் உணர்வர்.

கலைமகள் பிள்ளைத்தமிழ் என்னும் நூலைச் சுவைத்து மகிழ்ந்த காட்சிகளை நூலுள் பலவிடத்தும் காணலாம். எனினும் 'கலைநயம்' என்னும் தலைப்பில் அமைந்த இயலில்

மிகுதியாகக் காணலாம். கற்பனைக் காட்சிகளைத் திறனாய்வு அடிப்படையில் வகைப்படுத்தி விளக்குமிடங்களில் பிரபாகரன் கலைமகள் பிள்ளைத்தமிழைச் சுவைத்து மகிழ்ந்தமை நன்கு தெளிவாகின்றது.

ஒரு நூலைத் திறனாய்வு செய்பவருக்குப் பன்னூற் பயிற்சி இருப்பது நலம் பயக்கும். எவ்வகை நூலைத் திறனாய்வு செய்கின்றாரோ அவ்வகை நூல்கள் பற்றிய பரந்துபட்ட அறிவு திறனாய்வாளருக்கு இருப்பது மேலும் நலம் பயக்கும். பிரபாகரன் அவர்கள் கலைமகள் பிள்ளைத் தமிழைப் பயின்று திறனாய்வுக்கு உட்படுத்த விழைந்துள்ள ஆர்வம் இந்நூலுள் தெரிகின்றது. அதற்காக அவர் எடுத்துக் கொண்ட கற்றல் முயற்சிகளை முதல் இரண்டு இயல்களில் தெளிவாகக் காண்கிறோம். கலைமகள் பிள்ளைத்தமிழ் நூலை எழுதிய ஆசிரியரின் வாழ்க்கை வரலாற்றுப் பின் புலத்தையும் வித்துவான் கி. வேங்கடசாமி ரெட்டியார் எழுதிக் குவித்துள்ள நூல்களையும் கூறும் பகுதியில் பிரபாகரனின் பரந்துபட்ட அகல அறிவினைத் தெளிவாக உணர முடிகின்றது. பிள்ளைத்தமிழ் என்னும் ஒருவகைப் பிரபந்த நூலை ஆய்வுக்கு உட்படுத்தியதால் அப்பிள்ளைப் பிரபந்தம் தோன்றி வளர்ந்து வந்த வரலாற்றையும் காண முயன்ற பிரபாகரனின் அறிவார்ந்த ஆய்வு முயற்சியை இரண்டாம் இயலில் தெளிவாகக் காண்கின்றோம். பரந்துபட்ட அறிவால் ஆய்வு சிறப்புறும் என்பதற்கு இவ்வியல் சான்றாக உள்ளது.

நூலாய்வைப் பிரபாகரன் நல்ல முறையில் செய்துள்ளார். தனக்குப் பட்டதைத் தெளிவாக ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்தியிருக்கிறார். ஆய்வின் போது பட்ட மெய்ம்மைகளைக் கண்டவாறே வெளிப்படுத்தியிருப்பது சிறந்த ஆய்வு நாகரிகமாக உள்ளது. பூதூர் வேங்கடசாமி ரெட்டியார் பிறப்பால் வைணவர்; வளர்ப்பால் வைணவர்; வாழ்வாலும் வைணவர். ஆனால் அவர் சமயக் காழ்ப்பற்ற

சான்றோர் என்பதை ஆய்வாளர் ஆதாரத்துடன் இந்நூலுள் காட்டியிருப்பது சிறந்த ஆய்வுக்கான அடையாள மாக மிளிர்கின்றது.

கலைமகள் பிள்ளைத்தமிழ் குறித்து எழுதப் பெற்ற இந்நூல் ஆய்வு நூலாக இருப்பினும் பலரும் படிப்பதற் கேற்ற சுவையானதொரு நூலேயாகும். எளிய நடையில் எழுதியுள்ளார்; தெளிவான வாக்கியங்களில் எழுதியுள் ளார். நூலுள் சிலவிடங்களில் ஒருமை பன்மை மயக்கம் புகுந்துள்ளது; ஒற்றுப்பிழைகளுங்கூட ஒரு சிலவிடங்களில் தலைகாட்டியுள்ளன; ஒற்றுப்பிழைகள் அச்சுப்பிழைகளாகக் கூட இருக்கலாம். அடுத்து வரும் பதிப்புகளில் மொழிப் பிழைகளைக் களைந்துவிடலாம்.

பிரபாகரன் அவர்களை வாழ்த்துகிறேன்; அவருடைய எழுத்து முயற்சியைப் பாராட்டுகிறேன். நூல் பல எழுதிப் பெயருடனும் புகழுடனும் வாழ வாழ்த்தியமைகிறேன்.

—இரா. கு. நாகு

# ஆய்வுரை

**பேராசிரியர் டாக்டர் பொன். சௌரிராசன்,**

எம்.ஏ., பிஎச்.டி.,

தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு)

திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி

புலவன் ஒருவன் தான் போற்றித் தொழும் தெய்வத்தைப் பற்றியோ, தன்னைக் காத்துப் போற்றும் தலைவன்—தலைவி பற்றியோ பாட்டியல் மரபில் பாடுகின்ற இலக்கியம் தமிழில் சிற்றிலக்கியங்கள்–சிறு பிரபந்தங்கள் என்று அழைக்கப் பெறுகின்றன.

'பந்தம்' என்பது 'கட்டு' என்ற பொருளுடையது என்பது தமிழர் அனைவரும் அறிந்த ஒன்றே. 'பந்தபாசம்', 'பந்துக்கள்' என்று தமிழில் வழங்கும் தொடரும் சொல்லும் இதனை உணர்த்தும். சம்பந்தம், அனுபந்தம் என்பன போல பிரபந்தம் என்பதும் ஒரு கூட்டுச் சொல். 'பிர' என்பது உயர்ந்த, தெய்வீக, சிறந்த என்னும் பொருளினாது. ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் திவ்விய பிரபந்தம் என்ற தொடரால் வழங்கப் பெறுதலை அறியலாம். பல்வேறு யாப்புகளினாலோ, தொகுப்புகளினாலோ, பொருள் தொடர்புகளினாலோ, அந்தாதி முதலிய தொடைகளினாலோ, கட்டி அமைக்கப் பெறுவது பிரபந்தம் என்ற பெயரில் வழங்குகிறது.

இத்தகு பிரபந்தங்கள் தமிழகத்தில் வாழ்கின்ற சமயங்களின் அடிப்படையில் பல தோன்றியுள்ளன. அவற்றுள் தற்காலத்தில் கவிச்சக்ரவர்த்தி, வித்வான், வளவனூர் பூதூர் கி. வேங்கடசாமி ரெட்டியார் இயற்றியுள்ள கலைமகள் பிள்ளைத்தமிழ் என்பதை இந்த ஆய்வாள

சிறப்பாக மேற்கொண்டு ஆய்ந்து நூலாக திரு. பிரபாகரன் வெளியிடுகிறார். நூலாசிரியனாலும், நூற் பொருளினா லும், ஆய்ந்த நெறியிலும் இந்த நூல் தமிழ் பக்தி இலக்கிய வரலாற்று ஆராய்ச்சியில் ஒரு சிறப்பிடம் பெறத்தக்கது.

பண்டையத் தமிழ்ச் சான்றோர் தம் வரலாறு இன்னது என அறியத்தக்க குறிப்புக்களை தமிழன் எழுதி வைக்கத் தவறிவிட்டான். இன்றைய சான்றோர் பலர் வாழ்வுகூட விரைவில் மறக்கப்பட்டு விடுகின்றன. அப்படி மறக்கப் பெறாதவாறு சான்றோர் கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்களின் வாழ்க்கை வரலாற்றினையும், இலக்கியப் பணி களையும், வைணவத் தொண்டையும் இந்நூலில் இந்த இளைஞர் சிறப்பாகப் பதிவு செய்து வைத்துள்ளார்.

பிள்ளைத்தமிழ் இலக்கியத்தைப் பற்றிப் பொதுவாகவும் கலைமகள் பிள்ளைத்தமிழில் அமைந்து விளங்கும் வைணவ சமய சிந்தனைகள், சமுதாயச் சூழல்கள், கலை நலன்கள் ஆகியவற்றைச் சிறப்பாகவும் ஆய்வாளர் இரா. பிரபாகரன் இந்த நூலில் புலப்படுத்தியுள்ளார்.

'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்ற பொய்யா மொழிக்கு ஏற்ப உயர்ந்த ஒருவருடைய சிறந்த நூல் ஒன்று பற்றி மிகவும் ஈடுபாட்டோடு ஆய்ந்த இந்த ஆய்வாளர் சீரிய வாழ்வு பெற்றுச் சிறப்புற வாழ்த்துகின்றேன்.

**—பொன். சௌரிராசன்**

# வாழ்த்துரை


## பேராசிரியர் டாக்டர் ந. தர்மா ரெட்டி

எம்.ஏ., பிஎச்.டி.,

தமிழ்த் துறை

திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி


இலக்கியங்கள் தோன்றின. தோன்றிக்கொண்டு இருக்கின்றன. இன்னும் பல்வேறு வடிவங்களில் புதிய நோக்கில் தோன்ற இருக்கின்றன. இவ்வாறு தோன்றும் இலக்கியங்களை நன்கு தூய்ப்பதற்கும். நெறிப்படுத்துவதற்கும், திறனாய்வு தேவைப்படுகிறது. இத்திறனாய்வு பல நோக்கங்களில் அமைகிறது.

நண்பர் திரு. இரா. பிரபாகரன், எம்.ஏ., எம்.எட், எம்.பில் அவர்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட கலைமகள் பிள்ளைத்தமிழ் என்னும் நூலில், கலைமகள் பிள்ளைத் தமிழ் நூலாசிரியர் கி. வேங்கடசாமி ரெட்டியார் வாழ்க்கை வரலாற்றினையும் இப்பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் இலக்கிய அழகு அமைந்திருக்கும் பாங்கினையும், இந்நூலில் இடம் பெற்றிருக்கும் வைணவ சமயக் கருத்துக்களையும் தெளிவாய் விளக்கியுள்ளார்.

கலைமகள் பிள்ளைத்தமிழ் நூலாசிரியர், கி. வேங்கடசாமி ரெட்டியார் வித்வான் பட்டம் பெற்றவர். வைணவ சமயத்தில் ஈடுபாடு உடையவர். ஆராய்ச்சியாளராகவும், உரையாசிரியராகவும், பதிப்பாசிரியராகவும் எழுத்துப் பணி புரிந்துள்ளார். சிற்றிலக்கியங்கள் பல படைத்து படைப்பாசிரியராகவும் புகழ் பெற்றவர். நிலையாமையை உணர்ந்து வாழ்வில் தெளிவு பெற்ற வல்லவர்கள் மாறாத மெய்ப்பொருளைக் கண்டு அழியா பெருவாழ்வு அடை

கின்றனர். அவர்களில் கி. வேங்கடசாமி ரெட்டியார் ஒருவராகத் திகழ்கின்றார்.

இத்தகு சிறப்பு வாய்ந்த இவர் எழுதிய கலைமகள் பிள்ளைத் தமிழ்பற்றி ஆய்வு செய்ய நண்பர். திரு. இரா. பிரபாகரன் உட்கொண்டது பொருத்தமுடையது. நண்பர் பிரபாகரன் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையில் எம்.ஏ.எம்.பில். பட்டம் பெற்றவர். வைணவ சமயத்தில் இவருக்கிருந்த ஆர்வமும், கலைமகள் பிள்ளைத் தமிழில் அமைந்துள்ள நயமும் இவர் இவ்வாய்வு செய்வ தற்குத் தூண்டுதலாக அமைந்திருக்க வேண்டும்.

இந்நூலில் பிள்ளைத்தமிழ் இலக்கணம், கம்பர், குமரகுருபரர் முதலிய புலவர்களின் வரலாறும், தமிழ் நூல் களின் சிறப்பும், கம்பராமாயணத்தின் சிறப்பு, ஆழ்வார்கள் உணர்த்திய மெய்யுணர்வு பொருள்கள் நூலாசிரியர் வழி நின்று தெளிவுறுத்தப் படுகின்றன.

சமயம் ஒரு பிடிவாதமான கொள்கை மட்டுமல்ல ஆன்மா வளர்ச்சியின் பல நிலைகளுக்கும், வாழ்வின் பல்வேறு படிகட்கும் அமைக்கப்படும் மக்கள் ஒழுக்கலாற்றின் அடிப் படை ஆகும். எனவே, இச்சமயத்தைப் பற்றிய அறிவு சமுதாயத்திற்குத் தேவைப்படுகிறது. இந்து சமயங்களாகிய வைணவம், சைவம் இந்நூலில் அறிவுறுத்தி உள்ளார்.

கலைமகளின் சிறப்பும், கலைமகள் நூல் எழுதிய கி. வேங்கடசாமி ரெட்டியார் இலக்கியப் பணியும் பலரும் அறியச் செய்வது இந்த நூலாசிரியர் ஆர்வம். இந்த ஆர்வம் நிறைவேறுமாறு தமிழ்ச் சமுதாயம் இதனை ஏற்றுக்கொண்டு நலம் பெற விழைகின்றேன்.

நண்பர் திரு. இரா. பிரபாகரன் மேலும் பல புதிய கோணங்களில் சிறந்த பல நூல்கள் எழுதி சமுதாயத்திற்குப் பயன்பட்டு தானும் பயன் பெற்று உயர வாழ்த்துகின்றேன்.

—ந. தர்மா ரெட்டி

# முன்னுரை

நான் முதுகலை வகுப்பில் பயிலும் பொழுது கலைமகள் பிள்ளைத்தமிழ் நூல் பாடப் பகுதியில் ஒன்றாக இருந்தது. இதனைப் படிக்கின்ற பொழுது எனக்குக் கலைமகளிடத்து ஈடுபாடு ஏற்பட்டது. இந்நூலின் கருத்தமைப்பும் கவிதை நயமும் என்னை ஈர்த்தன. எனவே, இந்நூலையே ஆய்வுக்கு மேற்கொண்டேன்.

கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் கலைமகள் அந்தாதி, கலைமகள் பிள்ளைத்தமிழ், மாதர் நீதிக் கலி வெண்பா, வேதாந்த தேசிகன் சதகம், வேணுகோபாலன் பதிகம், காந்தியடிகள் நெஞ்சு விடுதூது முதலான பல சிற்றிலக்கியங்களைப் படைத்துள்ளார். இருப்பினும் கலை மகள் பிள்ளைத்தமிழ் மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பட்டது.

கலைமகள் பிள்ளைத்தமிழ் நூல் முதன்மை ஆய்வு மூலமாகவும், பிள்ளைத்தமிழ் இலக்கண நூல்களும், அவற்றின் திறனாய்வு நூல்களும், இலக்கிய நயங்களை விளக்கும் பிற நூல்களும் துணைமை மூலமாகவும் அமைகின்றன.

முதல் இயலுள் கலைமகள் பிள்ளைத் தமிழின் நூலாசிரியரான கி. வேங்கடசாமி ரெட்டியாரின் வாழ்க்கை வரலாறும் அவர் தம் தமிழ்ப் பணிகளும் கூறப்பெறுகின்றன. அடுத்து கலைமகள் பிள்ளைத்தமிழ் குறித்து அறிமுகம் செய்யும் வகையில் நூல் குறித்த பொதுவான செய்திகள் கூறப்பெறுகின்றன.

இரண்டாவது இயலுள் சிற்றிலக்கியங்கள் அவற்றுள் பிள்ளைத்தமிழ் பெறும் இடம். பிள்ளைத் தமிழின்

தோற்றம், வளர்ச்சி, பிள்ளைத் தமிழ் இலக்கணம் ஆகியனவும் பிள்ளைத் தமிழ் இலக்கணத்துடன் கலைமகள் பிள்ளைத்தமிழ் பொருந்தியிருக்கும் பாங்கும் விளக்கப் பெறுகின்றன.

மூன்றாவது இயலுள் கலைமகள் பிள்ளைத் தமிழில் இடம் பெற்றிருக்கும் வைணவ, சைவ சமயச் செய்திகளும் கலைமகள், பிரம்மன், இந்திரன், திருமால் முதலானோர் பற்றிய செய்திகளும் ஆய்ந்துரைக்கப் பெறுகின்றன. இக் காலச் சமுதாயம் தொடர்பான செய்திகள் சில கூறப் பெறுகின்றன.

இறுதி நான்காவது இயலுள், கலை நயத்தை வெளிக் காட்டும் கற்பனை நலம், உவமை, உருவகம், சிலேடை முதலிய அணிநலம் ஆகியன இந்நூலுள் கருத்தை விளக்க எந்த அளவுக்கு காரணமாய் அமைந்து சிறந்துள்ளன என்ற செய்திகள் சொல்லப்படுகின்றன. பின்னர் ஓசை நயம், வடிவம் ஆகியவற்றால், கவிதை சிறப்புப் பெற்றிருக்கும் நிலை எடுத்துரைக்கப்படுகின்றது.

முடிவுரையில் ஆய்வின் பயன்களாகக் காணப் பெற்ற செய்திகள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. இறுதியாக இவ்வாய்வு நிறைவடையத் துணைநின்ற நூல்கள் துணை நூற் பட்டியலில் தரப்பெற்றுள்ளன.

**—இரா. பிரபாகரன்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ. ஆ | — | உரையாசிரியர் |
| க.பி.த | — | கலைமகள் பிள்ளைத்தமிழ் |
| க.பி.த.பா.எண் | — | கலைமகள் பிள்ளைத்தமிழ் பாடல் எண் |
| க.பி.த.பா.எ.எ. | — | கலைமகள் பிள்ளைத்தமிழ் பாடல் எண்கள் |
| தண்டி | — | தண்டியலங்காரம் |
| தொல் | — | தொல்காப்பியம் |
| தொ.ஆ. | — | தொகுப்பாசிரியர் |
| த.ப.ஆ. | — | தலைமைப் பதிப்பாசிரியர் |
| ப. | — | பக்கம் |
| ப.ஆ | — | பதிப்பாசிரியர் |
| ப.ப | — | பக்கங்கள் |
| நூ | — | நூற்பா |
| நூ.எ | — | நூற்பா எண் |
| P | — | Page |
| Ps | — | Pages |

# நன்றியுரை

என்னுடைய நெறியாளராக அமைந்து, அரிய சிந்தனைகளை வழங்கி வாழ்க்கைக்கு வழிகாட்டும் எனது பேராசிரியர் டாக்டர் ந. தர்மாரெட்டி அவர்களின் அன்புள்ளத்தை என்றும் மறவேன். ஆய்வுக்குத் தேவையான நூல்களையும் சிறந்த கருத்துக்களையும் வழங்கி, நூல் வடிவில் வெளிவர உதவி புரிந்த பேராசிரியர் டாக்டர் பொன். சௌரிராசன் அவர்களுக்கு நன்றி உடையேன். பல்வேறு பணிகளுக்கிடையிலும், இந்நூலுக்கு அழகு சேர்க்கும் வண்ணம் அணிந்துரை வழங்கிய பேராசிரியர் டாக்டர், இரா. கு. நாகு அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

எனது ஆய்வு, நூல் வடிவில் வெளிவர உதவிய சப்தகிரி ஆசிரியர் திரு. இராமமூர்த்தி. மற்றும், சிறந்த நூல்களை அன்புடன் வழங்கிய திரு V. இலட்சுமி நாராயணன் மேலும் இவ்வாய்வுக்குத் தேவையான உதவிகளைச் செய்த என் நண்பர் திரு. சாந்தாடி சதாசிவன் அவர்களுக்கு நன்றி கூறக் கடமைப் பட்டுள்ளேன்.

நான் ஆய்வு செய்யும் பொழுது எனக்குத் துணை நின்று நூலாக வெளியிட உதவிய என் அன்பு சகோதரன். திரு. K. R. சிவபிரகாஷ், திரு K. S. சத்திய மூர்த்தி அவர்களுக்கு என் அன்பும் நன்றியும் என்றும் உரியது.

இந்நூல் குறித்த நேரத்தில் அச்சிட்டு உதவிய மூவேந்தர் முத்து அவர்கட்கும் மற்றும் நண்பர் திரு. A. சக்கரவர்த்திக்கும் என் நன்றி.

—**இரா. பிரபாகரன்**

# பொருளடக்கம்

# கலைமகள் பிள்ளைத்தமிழ்—ஆய்வு

## 1. நூலாசிரியர் வாழ்க்கை வரலாறு

கலைமகள் பிள்ளைத்தமிழ் ஆசிரியர் வி. பூதூர் வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள். இவர் வைணவ சமயத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டவர். வைணவ சமயத் தொடர்பாகச் சில நூல்கள் இயற்றியுள்ளார். இந்நூல்களின் வாயிலாக ஆசிரியரின் தமிழ்ப் புலமையும் வைணவ சமயத்தில் அவர் பெற்றிருந்த ஆழ்ந்த அறிவும் வெளிப்படு கின்றன.

இவ்வியலில் நூலாசிரியரின் வாழ்க்கை வரலாறும் தமிழ்ப்பணியும் கிடைத்த சான்றுகள் கொண்டு கூறப் பெறுகின்றன.

### பிறப்பு

வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் தமிழகத்திலுள்ள தென்னாற்காடு மாவட்டம், விழுப் புரம் வட்டத்தில் உள்ள வளவனூர் வி. பூதூர் என்னும்

ஊரில் பண்டைகுல ரெட்டியார் வகுப்பைச் சார்ந்த திரு. கிருஷ்ணா ரெட்டியார்—எத்திராஜம் அம்மையார் என்ற தம்பதியர்க்கு 1911-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 20ஆம்நாள் திங்கட்கிழமை மகனாகப் பிறந்தார். திவ்வியப் பிரபந்தத்தில் மிகவும் ஈடுபாடு கொண்ட கி. கேசவ ராமானுஜ ரெட்டியார் இவர்தம் உடன் பிறந்தவர் ஆவார்.

## கல்வி

இவர் பள்ளிப் பருவத்தில் கல்வி கற்க விரும்பி னாலும் தந்தையின் விருப்பத்திற்கு ஏற்ப விவசாயம் செய்ய வேண்டியதாயிற்று. ஆண்டுகள் சில கடந்த பின்பு கல்வியின் சிறப்பை நன்கு உணர்ந்து கல்வி கற்க முயன்றார். அதன் பயனாக அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து பயின்று புலவர் (வித்வான்) பட்டம் பெற்றார்.

பள்ளி கொண்டாபுரம் மா. வேங்கட கிருஷ்ணா பிள்ளை, டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார் முதலானோர் இவர்தம் ஆசிரியர்களாவர். 'மயிலைத் தொல்காப்பியர்' 'பன்மொழிப்புலவர்' வே. வேங்கட ராஜுலு ரெட்டியார், இராதாபுரம் அப்பாஜி ரெட்டியார், தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் ஆகியோருடன் நெருங்கிய பழக்கம் கொண்டிருந்தார்.

ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் வேதாந்த இராமானுஜ மஹாதேசிகன் சுவாமிகள் இவர்தம் ஞானாசிரியராவார்.

## வாழ்க்கை அமைப்பு

இவர்தம் துணைவியரான அம்புஜம் அம்மையார் வைணவ மரபில் வந்தவர். கணவனுக்கு ஏற்ற மனைவியாக விளங்கி, உற்றார் உறவினர்களைப் போற்றி விருந்தினர்களை அன்புடன் வரவேற்றவர். மேலும் கணவரைப் போன்றே வைணவ சமயத்தில் மிகுந்த பற்றுடையவராக வாழ்ந்தவர்.

இவருக்கு ஒரு மகனும் மூன்று பெண்களும் உள்ளனர். மகன் வி. இலட்சுமி நாராயணன் பி.ஈ. பட்டம் பெற்று உதவி கோட்டப் பொறியாள ராகத் தமிழகத்து நெடுஞ்சாலைத்துறையில் பணி யாற்றி வருகின்றார். சரஸ்வதி, ஜாம்பவதி, பத்மாவதி ஆகியோர் இவர் தம் மகளிர் ஆவர்.

## இலக்கியப் பணிகள்

ஆசிரியர் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பினும் தமிழ் இலக்கியத்தின் மீதும் வைணவ சமயத்தின் மீதும் மிக்க ஈடுபாடு கொண்டு சிற்றிலக்கியங்கள் சில இயற்றியுள்ளார். மேலும் கட்டுரைகள் சிலவற்றை எழுதியதோடு உரையாசிரியராகவும் பதிப்பாசிரியராக வும் தமிழ்த் தொண்டு புரிந்துள்ளார்.

## கட்டுரையாசிரியர்

ஸ்ரீமாதண்டவன் ஷஷ்டியப்த பூர்த்தி மலரில் (1967) வெளிவந்த "செய்யுள் விகாரமா? சொல் விகாரமா?" என்னும் கட்டுரையும், திருவேங்கடவன்

பல்கலைக்கழகத்தின் "திருக்குறள் கருத்தரங்கு மலரில்" (1974) வெளிவந்த 'திருக்குறளில் வைணவம்' என்னும் கட்டுரையும் இவர்தம் புலமையை வெளிக் காட்டும் சிறந்த கட்டுரைகளாகும்.

## ஆராய்ச்சியாளர்

"வில்லிபாரதத்தில் வினோதத் திருத்தங்கள்" என்ற தலைப்பில் வில்லி பாரதத்தை ஆய்வு செய்து வில்லி பாரதத்தில் காணப்படும் சில திருத்தங்களைக் கண்டறிந்து 1962-ஆம் ஆண்டு நூல் வடிவில் அவற்றை வெளியிட்டார். ஆசிரியர் சில திருத்தங்கள் செய்த பின்பு கி. வேங்கடசாமி ரெட்டியாரின் திருத்தங் களுடன் கூடிய பதிப்பு என்று வில்லிபாரதத்தைக் குறிப்பிட்டு வெளியிட்டுள்ளனர். இதன் மூலம் ஆசிரியருக்குப் புராணம், இதிகாசம் முதலியவற்றில் இருந்த பரந்த அறிவையும் ஆய்வுத் திறனையும் உணரலாம்.

## உரையாசிரியர்

நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தத்திற்குப் பழைய உரைகளின் விளக்க உரை நூல் ஒன்று எழுதி யுள்ளார். இந்நூல் 1984-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் நெய்வேலியில் நிகழ்ந்த ஸ்ரீரங்கம் ஆண்டவன் சுவாமி கள் அவர்களின் திருநட்சத்திர வைபவத்தின் போது, தமிழக முன்னாள் அமைச்சர் திரு. சௌந்தரராஜன் அவர்களால் வெளியிட, அன்றைய நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேசன் தலைவர் திரு. டாண்டன் அவர்கள் நூலின் முதற்படியைப் பெற்றுக் கொண்டார்.

## பதிப்பாசிரியர்

சொர்ணாவூர் வள்ளல் திரு. சந்தானம் ரெட்டியார் அவர்களின் நன்முயற்சியால் தமிழ் வேதமாகிய 'ஸ்ரீ நாலாயிர திவ்வியப் பிரபந்தத்'தை **1973-ஆம்** ஆண்டு முதன் முறையாகவும், பின்னர் **1981-ம்** ஆண்டு இரண்டாம் முறையாகவும் கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்டார். ஆசிரியர் அமரர் ஆனபிறகு மூன்றாவது முறையாக இந்நூல் **1987-ஆம்** ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இதுவரை சற்று ஏறக்குறைய ஐயாயிரம் படிகள் விற்பனையாகியுள்ளன.

## இலக்கிய ஆசிரியர்

ஆசிரியர் சிற்றிலக்கியங்கள் இயற்றியும் தமிழுக்குத் தொண்டு புரிந்துள்ளார். இந்தச் சிற்றிலக்கியங்கள் ஆசிரியரின் தமிழ்ப் புலமையை இயம்புகின்றன. அவைவருமாறு.

1. கலைமகள் அந்தாதி
2. மாதர் நீதிக் கலிவெண்பா
3. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது
4. வேதாந்த தேசிகன் சதகம்
5. வேணுகோபாலன் பதிகம்
6. வைகுந்தநாதர் பிள்ளைத்தமிழ்
7. கலைமகள் பிள்ளைத்தமிழ்

ஆகியனவாகும்.

## கலைமகள் அந்தாதி

இந்நூல் ஆசிரியரின் பதினெட்டாம் வயதில் இயற்றப்பட்டு 1931இல் 'கலா நிலையம்' என்னும் வார இதழில் வெளிவந்துள்ளது. இது வெண்பாவில் அமைந்த நூல். இந்நூலில் கலைமகளின் சிறப்பினையும் அருள் குணத்தையும் இவர் பலவாறு போற்றியுள்ளார்.

> **''நீயே எனதன்னை; நீயே என் தந்தையும்**
> **நீயே எனக்கமைந்த நேர் உறவும்—நீயே என்று**
> **எண்ணினேன் என்னை இணைப்பதத்திற் சேர்த்துவாய்**
> **பண்ணின்நேர் சொல்மகளே! பார்த்து''[1]**

என்னும் பாடலின் மூலம் ஆசிரியர் கலைமகள் மேல் கொண்டிருந்த பக்தியையும் பற்றையும் அறியலாம்.

## மாதர் நீதிக் கலிவெண்பா

கி. வேங்கடசாமி ரெட்டியார் இயற்றிய நூல்களுள் மாதர் நீதிக் கலிவெண்பாவும் ஒன்று. இந்நூலால் இவருடைய இலக்கிய அறிவையும், தெளிவான ஆற்றொழுக்காய் அமைந்த நடையையும், தாயராய் உள்ளோருக்கு இருக்கும் குடும்பப் பொறுப்பையும் அறிய முடிகின்றன.

மாதர் நீதிக் கலிவெண்பா என்னும் சொற்றொடர் மாதர் நீதிகளைக் கலிவெண்பாவில் கூறுவது எனப் பொருள்படும். இந்நூல் தாய் மகளுக்கு உணர்த்தும் அறிவுரைகளைக் கொண்டுள்ளது. இதில் இவர் தம்

அறிவுரைகள் மட்டுமல்லாமல் முன்னோர் கூறிய நீதிகளையும் திரட்டிக் கூறியுள்ளார்.

**''.......................................... வருந்தியுனைப்**
**பெற்றோர்க் கிழிவாய பேர்வாங்கி வையாதே**
**உற்றோர்கள் யாரும் உகப்படைவர்''[2]**

என்று பெற்றோர்களுக்கு நற்பெயரை மட்டுமே வாங்கித் தரும்படி நடந்து கொள்ளவும் என்று பெண்களுக்குக் கூறுகின்றார் ஆசிரியர்.

**''..................................................................தண்டாத**
**மாமிமுதல் மேலோர் சொல்வார்த்தை மறுத்துரையேல்**
**சாமியென அன்னவர்தந்தாள் வணங்கு''[3]**

என்னும் பாடலில் மாமியார் மற்றும் பெரியோர்கள் கூறுகின்ற வார்த்தைகளுக்கேற்ப நடந்து கொள்க எனப் பெண்களுக்குக் கூறுகின்றார்.

இந்நூலில் மகளுக்கு மட்டுமின்றிப் பொதுவாய்ச் சமுதாயத்திற்குப் பயன்படும் நீதிக் கருத்துகளும், அறிவுரைகளும் அடங்கியுள்ளன. 162 கண்ணிகள் கொண்டுள்ள இந்நூல் 1933-ஆம் ஆண்டு வெளியிடப் பட்டது.

**காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது**

மகாத்மா காந்தியடிகள் மீது நெஞ்சுவிடு தூது என்னும் இந்நூல் காந்தியடிகள் மீது ஆராக் காதல் கொண்டு அவர் திருவடித் தொண்டனாக வேண்டும் என்ற விருப்புடன் துடிக்கும் வேங்கடசாமி ரெட்டியார்

தம்முடைய நெஞ்சினைத் தூதாக விடுக்கும் செய்தி களைப் பொருளாக வைத்து மிகவும் நயமுடையதாகப் பாடப்பட்டதொரு கலிவெண்பாட்டாகும். இந்நூலில் நெஞ்சின் தன்மையை முதல் 38 கண்ணிகள் விளக்கு கின்றன. எல்லாச் செயலுக்கும் நினைவுதானே மூலம். அந்நினைவு நெஞ்சின் இயல்பு. இதனை ஆசிரியர்,

> ''..........................................பொன் ஆன
> **நீ நினையா தொன்றும் நிகழா துலகினில்என்**
> **மாநினைவும் நீ இதற்கு மாற்றுண்டோ''**[4]

என்றும் மனம் அலையும் தன்மையுடையது என்ப தனைக் குறிக்க 'மனம் ஒரு குரங்கு' என்பர். அதனையே உயர்வாகத் தோன்றும்படி குரங்கு என்ற இனம்பற்றி 'அனுமன்' எனக் காட்டி, 'அவ்வனுமன் செயற்கரிய செய்தவன்' என்று சுட்டி, அவனையே உனக்கு உவமை யாக மொழிவார் என்பதை,

> ''..........................................முனம்போய்க்
> **கடல்கடந்து மாதரசைக் கண்டுவந்து மூர்க்கர்**
> **அடல்கடந்த மாருதியை யன்றோ—திடமமைந்த**
> **உன்சீர்மைக் கொப்பென்றுரைப்பர் உணர்வுடையோர்''**

என்று கூறுவர் ஆசிரியர்.

இந்நூல் முதலில் காப்பு, அவையடக்கம் என்ற பொருள்மேல் இருகண்ணிகளும், இறுதியில் வாழ்த்தாக ஒரு வெண்பாவும் பெற்று 253 கண்ணிகள் அமையப் பெற்றது. முதற் பதிப்பாக 1934-ஆம் ஆண்டும், இரண்டாம் பதிப்பாக 1982-ஆம் ஆண்டும் நூலாசிரி யரின் எழுபத்தி இரண்டாவது அகவை நிறைவு

வெளியீடாக ந. சுப்பு ரெட்டியார் பதிப்பாசிரியராக இருந்தும் வெளியிடப்பட்டது.

**ஸ்ரீ வேதாந்த தேசிகர் சதகம்**

'ஸ்ரீ வேதாந்த தேசிகர் சதகம்' என்ற நீதிநூல் தெலுங்கு மொழியிலுள்ள பாஸ்கர சதகத்தின் கருத்து களைத் தழுவி எழுதப்பட்டது. இந்நூல் முதலில் நம்மாழ்வார் துதியுடன் தொடங்கி நூறு பாடல்களைக் கொண்டுள்ளது. ஏழைகள் எத்தனைத் துன்பப் படினும் உணவு கிடைக்காவிட்டால் பயன் அடையமாட்டார்கள் என்பதனை,

**''எத்துணைப்பாடு படினும் ஆ கூழ்தான்**
**இலாதவர் பயனொன்று மடையார்**
**மத்தென மலையைக் கடலினுள் நாட்டி**
**வானவ ருடன்கலந் தமுதம்**
**நத்தியே அரவக் கயிற்றினாற் கடைந்தும்**
**நண்ணின ரோஇராக் கதர்தாம்**
**அத்தனே! மிகுந்த சுத்தனே! யாவும்**
**ஆய்ந்தவே தாந்ததே சிகனே!''[6]**

என்ற கவிதையால் விளக்கிச் செல்லுகிறார். இந்நூல் புராண இதிகாச சமயச் செய்திகளை எடுத்துக்காட்டி நீதிக்கருத்துக்களை விளக்கிச் செல்கின்றது. ஒவ்வொரு பாடலின் முடிவிலும்,

**''..............................................யாவும்**
**ஆய்ந்தவே தாந்ததே சிகனே!''**

என்ற மகுடத்தைப் பெற்றுள்ளது. இந்நூலை 1965-ம் ஆண்டு பண்ணுருட்டி ஸ்ரீமத் எ. வே. ராமாநுஜ நாவலர் சபை வெளியிட்டது.

## வேணுகோபாலன் பதிகம்

இந்நூல் புதுவையைச் சார்ந்த பிள்ளைத்தோட்டத்தில் எழுந்தருளியிருக்கின்ற திருக்கண்ணபிரான் மேல் பாடப்பட்ட திருப்பதிகம் ஆகும். கண்ணனை வழிபடுவதால் எற்படும் நன்மைகள், கண்ணனைப் பற்றிய செய்திகள் ஆகியன இந்நூலுள் கூறப்பட்டுள்ளன.

இந்நூல் முதலில் காப்புடன் தொடங்கி, இப்பதிகம் பாட எளிதாய்த் துணைபுரிவான் என்று பிள்ளைத் தோட்டத்தில் இருக்கும் வேணுகோபாலனை வேண்டுகின்றார். ஆசிரியர் ஒவ்வொரு பாடலிலும் ஆனந்தரங்கம் பிள்ளையின் வள்ளல் தன்மையைக் கூறுகின்றார். இந்நூலின் ஐந்தாம் பாடலில்,

''அளந்திட்ட தூணினை அவன்தட்ட ஆங்கே
அருங்குணத் தாளரியதாய்
அவதரித் திரணியன் உளந்தொட்டு நசையின்மை
யதுகண்டு சீறி அவனைப்
பிளந்திட்ட கைகளாற் பிரகலாதற்குப்
பெருங்களி துளம்ப அபயம்
........................................''[7]

என்று தன்னுடைய பக்தன் பிரகலாதனைக் காக்கத் தூணில் தோன்றி இரணியனை அழித்த செய்தியும் ஒன்பதாம் பாடலில்,

''வெண்ணெயுண் டும்பொய் யுரைத்தும் மாதர்தம்
வெறுப்புக் கொளாராகியே
வீணன் பெருங்கள்வன் வஞ்சமகன் எனஅவர்
விளம்பிட உவந்துமேலும்

மண்ணையுண் டங்காந்த வாய்மலருள் அன்னைதான்
மாநிலம் கண்டுமருள
.................................................... —''8

என்று கண்ணன் சிறிய குழந்தையாக இருக்கும்போது நிகழ்த்திய திருவிளையாடலும் கூறிக் கண்ணன் பெருமையைக் குறிப்பிடுகின்றார். ஆசிரியர் வாழ்த்துடன் இப்பதிகத்தை முடிக்கின்றார்.

## வைகுந்தநாதர் பிள்ளைத்தமிழ்

ஆசிரியர் படைத்த சிற்றிலக்கியங்களுள் இதுவும் ஒன்று. கலைமகள் பிள்ளைத்தமிழ் நூல்போன்று இப்பிள்ளைத்தமிழ் நூலும் வைணவ சமயத்தைச் சார்ந்த நூலாகும். எனினும் இப்பிள்ளைத்தமிழ் நூல் கிடைக்கவில்லை.

## அச்சேறா நூல்கள்

இவ்வாசிரியரின் ஒரு சில நூல்கள் அச்சேறாமல் இருக்கின்றன. அவை பின்வருமாறு:

'அத்திராம் பாவாஜி சுவாமிகளின் சரித்திரப் பாடல்கள்' கவியரங்கப் பாடல்களுள் தருமையாதீனத்தில் கவியரங்கேறிய 'ஆவணி மூலத்தில் ஆண்டவன் அருள்வெள்ளம்' என்னும் பாடல்களும் மேலும் சில பதிகங்களும், தனிப்பாடல்களும் உள்ளன. 'ஆவணி மூலத்தில் ஆண்டவன் அருள் வெள்ளம்' என்னும் பாடல் அனைவராலும் போற்றிப் புகழப்பட்டன,

**நாட்டுப் பற்று :**

கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் மிகுந்த நாட்டுப் பற்று உடையவர். தம்முடைய வாழ்நாள் முழுவதும் கதராடையையே அணிந்திருந்தார். நமது நாட்டின் மீதும், காந்தியடிகள் மீதும் அவருக்கிருந்த பற்றினை அவரின் காந்தியடிகள் நெஞ்சு விடு தூது என்ற நூலின் வாயிலாக நன்கு உணர முடிகின்றது.

சி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் கற்றோர் கவனத்தையும் கல்லாதார் ஆர்வத்தையும் ஒருங்கே ஈர்க்கும் சொல் திறம் படைத்த சொல்லின் செல்வர்; பல வைணவ மாநாடுகளில் தலைமையேற்றுச் சொற் பொழிவுகள் ஆற்றி வைணவ உலகிற்கு அருந் தொண்டாற்றியவர். பண்ணுருட்டி ஸ்ரீமத் ராமாநுஜ நாவலர் சபைக்கு முப்பத்திரண்டு ஆண்டு காலமாக நிலையான தலைவராக இருந்து அவர் ஆற்றிய பணிகள் ஏட்டிலடங்கா.

'கம்பரின் சமயக் கொள்கை' என்னும் தலைப்பில் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. அவர்கள் எழுதிய நூலுக்குப் புத்தூர் சுவாமிகள் 'சங்ககாலத் தமிழர் சமயமே கம்பனின் சமயம்' என்னும் நூல் வாயிலாக எழுதிய மறுப்புரைக்கு அணிந்துரை அளித்த வேங்கட சாமி ரெட்டியார் அவர்களுக்குத் தமிழ்கூறு நல்லுலகம் என்றும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளது. இந்த அணிந்துரையே இவரின் இறுதிக் கட்டுரையாக அமைந்தது. இந்தஅணிந்துரை நவம்பர் மாதம் **30-ஆம்** நாள் **1984-ஆம்** ஆண்டு '**ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம்**' **என்னும் மாதப் பத்திரிகையில் வெளியானது.**

வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் வைணவ சமயத்தில் ஈடுபாடு கொண்டிருப்பினும், பிற சமயங்களைப் பழிப்பது இல்லை. சமயப் பொது நோக்குடையவர்; இவர் தருமையாதீனத்தில் கவியரங்கேறி 'மணிவாசகர் வரலாறு' பாடிய சமரச நெறியாளர். மேலும் இவர் புதுவை விலக்ஷணகவி என்னும் ஏ. வே. இராமாநுஜ நாவலர் என்பவரின் வாழ்க்கை வரலாற்றினைச் 'சரித்திர சுருக்கம்' என்று எழுதி 1958-ஆம் ஆண்டு புதுச்சேரியில் வெளியிட்டுள்ளார்.

மேற்கூறிய சிறப்புகள் வாய்ந்த வி. பூதூர் சி. வேங்கடசாமி ரெட்டியார்க்குத் திருப்பதி திருமலையில் ஆகஸ்டு மாதம் பதினெட்டாம் நாள் 1971-ஆம் ஆண்டு மணிவிழா சிறப்புடன் நடைபெற்றது.

ஆசிரியரைப்பற்றி அண்ணங்காச்சாரியார் சுவாமிகள் குறிப்பிடும் போது 'வேண்டுங்கலை கற்ற நான் மதித்த வித்வான் வேங்கடசாமி ரெட்டியார்' என்று கூறுவார். ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் கூறும்போது 'அவர் சிறந்த பண்டிதர் தமிழெனும் அளப்பரும் சலதியில் ஆழ்ந்து அனுபவித்தவர். இலக்கண இலக்கிய அறிவுப் படைத்தவர்களில் தலை சிறந்தவர்' என்று புகழ்ந்து ஆசிரியரின் நாலாயிர திவ்விய பிரபந்தம் பதிப்பில் குறிப்பிட்டுள்ளார். நூலாசிரியர்க்குக் 'கவிச்சக்கரவர்த்தி' 'கவிதார்ச்சிகச் சிம்மம்' 'ஸ்ரீவைணவச் செம்மல்' 'முதுபெரும் புலவர்', 'முப்பால் அறிஞர்' என்ற சிறப்புப் பெயர்களும் உண்டு.

**மறைவு**

பூதூர் பெரிய ஸ்வாமிகள் என்று அனைவராலும் பாராட்டப் பெற்றுத் திகழ்ந்த வேங்கடசாமி ரெட்டியார் 24-12-1984-இல் அமரரானார்.

இத்தகு பெருமை வாய்ந்த இப்பெருந்தகையாரின் 'கலைமகள் பிள்ளைத்தமிழ்' இனி இங்கு ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொள்ளப்படுகின்றது.

**கலைமகள் பிள்ளைத்தமிழ்**

பிள்ளைத்தமிழ் என்னும் சிற்றிலக்கியம் இறைவன், இறைவி, மன்னர்கள், வள்ளல்கள், பெரியோர்கள் இவர்களைக் குழந்தைக்குரிய பருவத்தினராக எண்ணிக் குழந்தைக்குரிய பத்துப் பருவங்கள் அமைத்து. அப்பத்துப் பருவங்களில் அவர்களின் செயற்கரிய செயல்களை எளிய இனிய தமிழால் பாடப்பெறுவதே ஆகும்.

பிள்ளைத்தமிழ் என்னும் சிற்றிலக்கிய வகை ஆண்பாற் பிள்ளைத்தமிழ் என்றும், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என்றும் இருவகைப்படும். கி. வேங்கடசாமி ரெட்டியார் கலைமகள் பிள்ளைத்தமிழ் நூலைப் பெண்பாற் பிள்ளைத்தமிழ் இலக்கணத்தின் படி இயற்றியுள்ளார்.

**நூல் தோன்றக் காரணம்**

கலைமகள் வழிபாட்டில் ஆர்வமுடைய இந்நூலாசிரியர்க்குச் சரசுவதி பூசைத் திருநாளிற்

பெண் குழந்தை ஒன்று பிறந்தது. சரசுவதி பூசையிற் பிறந்த அப்பெண் குழந்தைக்குச் சரசுவதியென்று பெயரிட்டு வளர்த்து வந்தார். அப்பெண் குழந்தை இளமையிலேயே நோய்வாய்ப்பட்டமையால் வருந்திய ஆசிரியர் தம் மகளது நோயினை நீக்கியருள வேண்டிக் கலைமகளைப் போற்றும் ஓர் இரவுக்கு ஒரு பருவ மாகக் கலைமகள் பிள்ளைத்தமிழ்க்குரிய பத்துப் பருவங்களையும் பாடி இந்நூலை நிறைவு செய்து உள்ளார்.

கலைமகள் பிள்ளைத்தமிழ் நூல் கம்பரின் 'சரசுவதி அந்தாதி' குமரகுருபரரின் 'சகலகலாவல்லி மாலை, என்னும் நூல்களைப் பின்பற்றிப் பாடப் பட்டதாகும். இந்நூலில் கலைமகளின் சிறப்பும் பெருமையும் சிறப்பாகப் போற்றப்பட்டுள்ளன. ஆழ்வார்கள் ஆசாரியர்கள் பற்றியும் கூறியுள்ளார். இக்காலச் சமுதாயத்தையும் சில இடங்களில் சுட்டிச் செல்கின்றார். சமய புராணச் செய்திகளும் ஆங்காங்கு இடம் பெற்றுள்ளன.

இந்நூலில் கம்பர், குமரகுருபரர் முதலிய புலவர் களின் வரலாறு; தமிழ் நூல்களின் சிறப்பு, கம்ப ராமாயணத்தின் சிறப்பு ஆழ்வார்கள் உணர்த்திய மெய்யுணர்வுப் பொருள்கள் ஆகியன சிறப்பாகப் பாடப் பெற்றுள்ளன.

கலைமகள் பிள்ளைத்தமிழில் அமைந்த பாடல்கள் அனைத்தும் தமிழுக்குச் சிறப்பாக உரிய ஓசை சந்தவின்பம், தன்மை, உவமை, உருவகம், சிலேடை முதலிய அணிநலன்களும், இயற்கை வருணனைகளும்

கற்பனை விளக்கங்களும் கொண்டனவாகச் சிறப்புடன் அமைந்துள்ளன. இந்நூலின் முதற்பருவமாகிய காப்புப் பருவத்தின் முன் அமைக்கப்பட்ட பழிச்சினர் பரவல் என்னும் பகுதி ஆசிரியரின் வைணவப் பற்றினைக் காட்டுகின்றது.

காப்புப்பருவத்தில் உள்ள திருமால்,சிவன் முதலிய தெய்வங்களுக்குரிய பாடல்கள் அந்தத் தெய்வங்களை முழுமுதற் கடவுளாகக் கொண்டு போற்றும் தன்மை ஆசிரியரின் சமயப் பொதுமையினை உணர்த்து கின்றது.

கலைமகள் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூல் முதலில் சடகோபர் காப்புடன் தொடங்கி, காப்புப் பருவம், செங்கிரைப்பருவம், தாலப்பருவம், சப்பாணிப் பருவம், முத்தப்பருவம், வாரணைப்பருவம், அம்புலிப் பருவம், அம்மானைப் பருவம், நீராடப் பருவம், பொன் ஊசற் பருவம் எனப் பத்துப் பருவங்களைக் கொண்டு உள்ளது. ஒவ்வொரு பருவத்திலும் பத்துப்பாடல்களும் வாரானைப் பருவத்தில் மட்டும் பதினொன்று பாடல் களும் உள்ளன. காப்புச் செய்யுள் ஒன்றும் பழிச்சினர் பரவலில் ஒன்பது பாடல்களும் உள்ளன. ஆக மொத்தம் நூற்றுப் பதினொன்று பாடல்கள் இந்நூலில் அமைந்து நூலைச் சிறப்பிக்கின்றன.

# குறிப்புகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சி. வேங்கடசாமி ரெட்டியார் | கலைமகள் அந்தாதி | பாடல் எண்- | 7 |
| 2. | ...................... | மாதர்நீதிக் கலி வெண்பா | '' | 11 |
| 3. | மேற்படி | | '' | 13 |
| 4. | ...................... | மகாத்மா காந்தியடிகள் நெஞ்சு விடுதூது | '' | 4 |
| 5. | மேற்படி | | '' | 22-24 |
| 6. | ...................... | ஸ்ரீ வேதாந்த தேசிகர் சதகம் | '' | 17 |
| 7. | ...................... | வேணுகோபாலன் பதிகம் | '' | 5 |
| 8. | மேற்படி | | '' | 9 |

# 2. சிற்றிலக்கியம்—
# பிள்ளைத்தமிழ் இலக்கியம்

## சிற்றிலக்கியம்

காப்பியத்தின் உறுப்புகளாயிருந்தவை காலப் போக்கில், தனி இல்க்கிய வகையாக உருப்பெற்றால் அதனைப் பேரிலக்கியமாகிய காப்பியத்தினின்று வேறுபடுத்தும் பொருட்டுச் சிற்றிலக்கியம் என்று வழங்கத் தொடங்கினர். தொல்காப்பியம் கூறும் விருந்து என்னும் வனப்பு புதியனவாய் படைக்கப் பெறும் இலக்கியங்களைக் குறிக்கின்றது.

> **''விருந்தே தானும்**
> **புதுவது கிளந்த யாப்பின் மேற்றே''[1]**

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இதற்குப் பேராசிரியர் உரையில் ''புதுவது கிளந்த யாப்பின் மேற்று என்பது புதிதாகத்தாம் வேண்டியவற்றுள் பல செய்யுளும் தொடர்ந்து வரச் செய்வது. அது முத்தொள் ளாயிரமும் பொய்கையார் முதலானோர் செய்த அந்தாதிச் செய்யுளும் என உணர்க. கலம்பகம் முதலி யனவும் சொல்லுப என்று குறிக்கின்றார். நச்சினார்க்

கினியரும் இதே கருத்தை வலியுறுத்துகின்றார். எனவே அந்தாதி, கலம்பகம் முதலியனவெல்லாம் விருந்து என்னும் வனப்பிற்குரியன என்றும் அவையே பிரபந்தங்கள் என்று வழங்கும் சிற்றிலக்கியங்கள் என்றும் தெரிகின்றது.

### சிற்றிலக்கியத்தின் வளர்ச்சி

தொல்காப்பியர் காலத்தில் சிற்றிலக்கியக் கூறுகள் தோன்றின என்றாலும், அவை தனி இலக்கிய வகைகளாக அமையப் பல நூற்றாண்டுகளாயின எனலாம். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் காரைக்கால் அம்மையார் எழுதிய அற்புதத் திருவந்தாதியே முதல் சிற்றிலக்கியமாகக் கருதப்படுகின்றது. பின்னர் திருவிரட்டை மணிமாலை, முத்தத்திருப்பதிகம், சேரமான் பெருமாள் நாயனார் இயற்றிய திருக்கைலாய ஞானவுலாவும், பாண்டிக் கோவையும், நந்திக் கலம்பகமும் இவ்வகைச் மேலும் சிற்றிலங்கியங்களின் முதல் நூல்களாகக் கருதப்படுகின்றன.

பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தம் தோன்றி வளர முன்னோடியாய்த் திகழ்ந்தவர் பெரியாழ்வார்.

### சிற்றிலக்கியங்கள் எண் வரையறை :

சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு வகையின என்பதை முதன் முதலாக கி. பி. 14-ம் நூற்றாண்டில் எழுந்த சிவந்தெழுந்த பல்லவன் உலா,

> **''.........................தொண்ணூற்றாறு**
> **கோல பிரபந்தங்கள் கொண்ட பிரான்''[2]**

என்று குறிக்கின்றது. 16-ஆம் நூற்றாண்டில் எழுந்த பிரபந்த மரபியல்:

> **''பிள்ளைக்கவி முதல் புராணம் ஈறாகத்**
> **தொண்ணூற் றாறெனெந் தொகையதான''[3]**

என்றும், பிரபந்த தீபிகை,

> **''பதினாறை யாயிற் பெருக்கு பிரபந்தாதி**
> **பலவகை யெடுத்துரைக்கின்............''[4]**

தொண்ணூற்றாறு என்றும் எண் வரையறையைக் காட்டும் பிரபந்த மரபியல், பிரபந்த தீபிகை என்னும் நூல்களும் தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்கட்கு முழுமையாக இலக்கணம் கூறவில்லை. "சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு வகை என்பதைச் சமய சாத்திர தருக்க கோவை தொண்ணூற்றாறு வகை என்பது போலப் பிரபந்தங்களும் தொண்ணூற்றாறு எனக் கொண்டனர் போலும்''[5] என்பர். மேலும் "தொண்ணூற்றாறு என்னும் பிரபந்த வரையறை பாட்டியல் நூல்களிலேயே எல்லை கடந்து இருநூற்றுக்கும் மேல் வளர்ந்துள்ளது. திறனாய்வாளரிடம் இது மேலும் விரிந்து வருகின்றது. இலக்கிய சான்றுடன் 186 (41 + 145) வகைகளைத் தெளிவாகக் கூறுவதும்''[6] "முந்நூற்றுக்கு மேற்பட்ட சிற்றிலக்கிய வகைகள் தமிழில் உள்ளன என சண்முகம் பிள்ளை கூறுகிறார்''[7] முதலில் சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு பற்றிய பட்டியல் 1838-ஆம் ஆண்டு வீரமாமுனிவர் வெளியிட்ட தொன்னூல் விளக்கத்தில் தான் காணப்படுகின்றது. இவரே பின்னர் இயற்றிய சதுரகராதியில் உரைநடையாய்த் தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்கள் பற்றிய விளக்கம் தருகின்றார்.

சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு வகையின தாக இருப்பினும், மக்களின் வாழ்க்கை நிலைமாறு படும் போதும், இலக்கியக் கலைகள் வளர்ச்சியினாலும், கால ஓட்டத்தின் மாறுதலாலும் மேலும் சிற்றிலக்கியங் கள் தோன்றி அவை விரிவடைந்து வந்தன எனலாம்.

**பிரபந்தம் :**

'பிரபந்தம்' என்ற சொல்லுக்கு நன்கு கட்டப்பட்ட நூல் என்று பொருள். பிரபந்தம் என்ற வடசொல்லால் அழைக்கப்பட்டனவெல்லாம் சிற்றிலக்கியங்கள் எனச் செந்தமிழால் அழைக்கப்படும். முதன் முதலில் பிரபந்தம் என்ற சொல் நாதமுனிகளால் தொகுத்தளித்த நாலாயிர திவ்விய பிரபந்தம் என்னும் நூலுக்கு ஏற்பட்டது. பாட்டியல் நூல்கள் உரைக்கும் இலக்கிய வகைகளில் பெரும்பாலானவை சிற்றிலக்கியங்களாக அமைந் துள்ளன. இவ்விலக்கிய வகைகளைச் சிறு பிரபந்தங்கள் என்று கூறினார். எனவே பிரபந்தங்களைத் தமிழில் சிற்றிலக்கியங்கள் என்று அழைத்தனர்.

**சிற்றிலக்கிய வகைகள் :**

"தமிழ் இலக்கியத்தில் சிற்றிலக்கியங்கள் பரந்து விரிந்துள்ளதை மொத்தம் முற்நூற்று முப்பத்தொரு இலக்கிய வகைகள் இருப்பதாக வரையறுப்பர்."[8] எனவே அவை இனியும் சால வளர்ச்சியினாலும், சமுதாய முன்னேற்றத்தாலும் விரிவடைந்து வளர்ச்சியடைய லாம். தமிழ் இலக்கியத்தில் சிற்றிலக்கியங்கள் எண்ணிக்கையில் மிகுந்து இருப்பினும் அவற்றில்

அந்தாதி, உலா, கலம்பகம், குறவஞ்சி, சதகம், பரணி, கோவை, தூது, பதிகம், பள்ளு, ஆற்றுப்படை, இரட்டை மணிமாலை, ஊசல், மடல், பிள்ளைத்தமிழ் முதலிய சிற்றிலக்கிய வகைகளைக் குறிப்பிடத் தக்கன வாகக் கூறலாம். இவ் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட நூல் பிள்ளைத்தமிழ் வகையைச் சார்ந்ததால் இங்கு அவ்வகைச் சிற்றிலக்கியம் காணலாம்.

### பிள்ளைத் தமிழ்:

பிள்ளைத்தமிழ் இலக்கியம் என்பது, தன்னுடைய உள்ளங்கவர்ந்த பாட்டுடைத் தலைவனையோ, அல்லது தலைவியையோ, குழந்தைப் பருவத்தினராக எண்ணிக் கொண்டு, அக்குழந்தைக்கு பத்துப்பருவங்கள் அமைத்து, அப்பத்து பருவங்களில் அவர்களின் செயற் கரிய செயல்களைப் பாடுவதாகும்.

### தொல்காப்பியம்

பிள்ளைத்தமிழ் என்னும் சிற்றிலக்கிய வகை முழுவடிவம் அடைவதற்கு முன்னர்ப் பிள்ளைத்தமிழ் இலக்கியம் பற்றிய கூறுகள் பல்வேறு தமிழ் இலக் கியங்களில் காணப்படுகின்றன. முதன் முதலில் தொல்காப்பியத்தின் பொருளதிகாரம் புறத்திணை இயலில் வரும் பாடாண் திணையில்,

**''குழவி மருங்கினும் கிழவதாகும்''**[2]

என்னும் நூற்பா காணப்படுகின்றது. இந்நூற்பா பிள்ளைப்பருவத்திலும் காமப்பொருண்மையோடு பாட்டு டைத் தலைமகனை வாழ்த்துதல் உண்டு என்று

உணர்த்துகின்றது. இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் "குழவிப்பருவத்தும் காமப்பகுதி கூறப்பெறும். அவர் விளையாட்டு மகளிரோடு பொருந்தியக்கண்" எனக் கூறுகிறார்.

நச்சினார்க்கினியர் "குழவிப் பருவத்தும் காமப் பகுதி உரியதாகும் என்றும் மருங்கு என்றதனால் மக்கட்குழவியாகிய ஒரு மருங்கே கொள்க. தெய்வக் குழவி இன்மையின் இதனை மேலவற்றோடு ஒன்றாது வேறு கூறினார். தந்தையரிடத்தன்றி ஒரு திங்களிற் குழவியைப்பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலாலும் பாராட்டுமிடத்துச் செங்கீரையும், தாலும், சப்பாணியும் முத்தமும், வரவுரைத்தலும், அம்புலியும், சிற்றிலும், சிறுதேரும், சிறுபறையும், எனப் பெயரிட்டு வழங்குத லானும் என்பது என்றும், குழவிப்பருவம் கழிந்தோர் அது வேண்டியக்காலும் அக்குழவிப் பருவமே கருதிப் பாடுக வென்றதற்குக் கிழதாகுமென்றார்"[11] என விளக்குகின்றார்.

இவ்விளக்கத்தால் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வரவு, அம்புலி, சிற்றில், சிறுதேர், சிறுபறை எனப் பிள்ளைத்தமிழில் காணுகின்ற பத்துப் பருவங்களையும் நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டி யுள்ளார்.

## புறப்பொருள் வெண்பா மாலை

சேரர் ஐயனாரிதனாரின் புறப்பொருள் வெண்பா மாலை தொல்காப்பியத்திற்குப் பின்னர்ப் புறத்திணை இலக்கணம் கூற எழுந்த நூல். இந்நூலில்,

> **"இளமைந்தர் நலம் வேட்ட**
> **வளமங்கையர் வகையுரைத்தன்று"**[12]

எனக் குறிப்பிடுவர். இந்நூற்பாவிற்கு உரையாசிரியர் குழவி பருவத்தாராகிய மைந்தரது நலத்தை விரும்பின காமப் பகுதி நிறைந்த மங்கையரது தன்மையைச் சொல்லியது என விளக்குகின்றார். எனவே தொல்காப்பியர் காலத்தில் மக்களிற் சிறந்தோரைக் குழந்தைப் பருவத்தினராக எண்ணிப் பாடும் மரபு உண்டு என்பதை அறியலாம்.

**பாட்டியல் நூல்கள் கூறும் இலக்கணம்**

பிள்ளைத்தமிழ் இலக்கணத்தைப் பாட்டியல் நூல்கள் விரிவான முறையில் கூறுகின்றன. பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், பிரபந்த மரபியல், இலக்கண விளக்கப்பாட்டியல், தொன்னூல் விளக்கம், முத்து வீரியம், பிரபந்த தீபிகை, நேமிநாதம் ஆகிய நூல்களில் பிள்ளைத்தமிழ் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.
சிதம்பரப்பாட்டியலில்,

**''துறுகொலைக்கித் தெய்வக்காப் பாய்சுற்றத்**
**தொகையளவு வகுப்பகவல் விருந்தந்தன்னால்**
**முறைகாப்புச் செங்கீரை தால் சப்பாணி**
**முத்தம் வராணையும் புலியினோடு**
**சிறுபறை சிற்றிற் சிறுதேரிவையின் மூன்றும்**
**தெரிவையர்க்குப் பெருகழங்கம் மானையூசல்**
**பெறுமூன்று முதலிரு பத்தொன்று ளொற்றை**
**பெறுதிங் கடனிற் பிள்ளைக் கவியைக்**
**கொள்ளே''[13]**

என வரும் நூற்பாவில் பிள்ளைத்தமிழின் இலக்கணம் மிகவும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. பாட்டியல்

நூல்கள் கூறும் இலக்கணத்தின் அடிப்படையில் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தைப் பின் வருமாறு வகைப் படுத்திக் கூறலாம்.

## காலவரையறை

பிள்ளைத்தமிழ் இலக்கிய வகை பத்துப் பருவங் களாகப் பகுக்கப்பட்டு, ஒவ்வொரு பருவத்திற்கும், பத்து ஆசிரிய விருத்தப்பாக்களாக மொத்தம் நூறு ஆசிரிய விருத்தப்பாக்களைக் கொண்டதாக அமையும். குழந்தையின் மூன்றாம் திங்கள் முதல் இருபத்தோராம் திங்கள் வரையில் உள்ள மாதங்கள் பத்துப் பருவங் களாகப் பிரிக்கப்பட்டு அவை முறையே மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்து, பதினேழு, பத்தொன்பது, இருபத்து ஒன்று என ஒற்றித்தத் திங்கள் அடிப்படையில் பாடப் படும். பின் வரும் பன்னிரு பாட்டியல் நூற்பா பத்துப் பருவங்களுக்குரிய காலவரையறையைப் புலப்படுத்து கின்றது.

> **''பிள்ளைப்பாட்டே தெள்ளிதின் கிளப்பின்**
> **மூன்று முதலா மூவேழ் அளவும்**
> **ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே''**[14]

மேற்கூறிய வரையறையில் மாற்றங்களும் உள்ளன. குழந்தையின் மூன்றாம் ஆண்டினும், ஐந்தாம் ஆண்டி னும், ஏழாம் ஆண்டினும் பாடுவதும் உண்டு எனப் பாட்டியலும், குழந்தையின் ஐந்தாம் ஆண்டினும், ஏழாம் ஆண்டினும் பாடினும் இழுக்காகாதென்று வெண்பாப் பாட்டியலும் உரைக்கின்றன. மேலும் ஆண் மகனுக்குப் பதினாறு வருடம் வரையிலும், பெண்

மகளுக்குப் பூப்பு நிகழும் வரையிலும் பாடுவது இழுக்காகாதென்று இந்திரகாளியம் விளக்குகின்றது. அரசன் இளைஞன் ஆயினும் முடிசூடிய பின்னர்ப் பிள்ளைக்கவி பெறலாகாது என்பதை,

**''தொன்னிலை வேந்தர் சுடர்முடி சூடிய**
**பின்னர்ப் பெறாஅர் பிள்ளைப்பாட்டே''[16]**

என விளக்குகின்றமை ஒப்பு நோக்கத்தக்கது.

**பருவங்கள்**

பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் பொதுவாகப் பாடப் பெறும் பருவங்கள் பத்து ஆகும். அவை முறையே காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பன ஆகும். மேற்கூறிய பருவங்கள் குறித்து,

**''காப்பொடு செங்கீரை தால்சப் பாணி**
**யாப்புறு முத்தம் வருகஎன் றல்முதல்**
**அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்**
**நம்பிய மற்றவை சுற்றத் தளவென்**
**விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்''[16]**

எனப் பன்னிரு பாட்டியல் நூற்பா கூறுகின்றது. பெண்பாற் பிள்ளைத்தமிழாயில், ஆண்பாற் பிள்ளைத் தமிழில் உள்ள முதல் ஏழு பருவங்கள் முறையே கொண்டு இறுதியில் உள்ள மூன்று பருவங்களுக்குப் பதிலாகச் சிற்றில் இழைத்தல், சிறு சோறாக்கல், குழமகன், ஊசல், காமவேள், நோன்பு ஆகிய பருவங் களுள் எவையேனும் மூன்று பருவங்களைப் பெற்று வரும். மேற்கூறிய ஐந்து பருவங்களிலும் பொதுவாகப் பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களில் கழங்கு,

அம்மானை, ஊசல் ஆகிய மூன்று பருவங்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். மேற்கூறிய பருவங்கள் குறித்து வெண்பாப் பாட்டியல்,

''சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை—போற்றரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரொடும் பத்து''[17]

என்றும்,

''சிற்றில் இழைத்தல் சிறுசோறாக்கல்
பொற்பமர் குழமகன் புனைமணி ஊசல்
ஆண்டீ ராறதில் எழிற்காமன் நோன்பொடு
வேண்டுதல் தானுள விளம்பினர் புலவர்''[18]

என்று பன்னிரு பாட்டியலும் கூறுகின்றது. பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய பருவங்கள் குறித்துப் பின் வரும் இலக்கண விளக்கப்பாட்டியல் நூற்பா,

''பின்னைய மூன்றும் பேதையர்க் காக
ஆடுங் கழங்கம் மானை ஊசல்
பாடுங் கவியால் பகுத்து வகுப்புடன்
அகவல் விருந்தத்தாற் கினையளவாம்''[19]

என்று விளக்குகின்றது. எனவே, இப்பாட்டியல் நூற்பாக்களின் மூலம் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கும், பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் உள்ள வேற்றுமைகளை அறிய முடிகின்றது.

## தமிழ் இலக்கியத்தில் பிள்ளைத்தமிழ்க் கூறுகள்

ஆழ்வார்களின் பக்திப் பாசுரங்களில் பிள்ளைத் தமிழ்க் கூறுகள் பொதிந்திருத்தலைக் காண்கின்றோம். பிள்ளைத்தமிழ் என்னும் பிரபந்தம் தோன்றுவதற்கு வழிவகை செய்த பெருமைக்குரியவர் பெரியாழ்வார். கண்ணனைக் குழந்தையாகப் பாவித்து அவர் பாடி அருளிய பாசுரங்கள் பிற்காலத்தெழுந்த பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்களுக்கு வழிகோலின. மேலும் குலசேகரர் திருமாலின் பிள்ளைப் பருவத்தை போற்றிப் பாடியுள்ளார்.

**''மன்னுபுகழ்க் கௌசலையின் மணிவயிறு வாய்த்தவனே**
**தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய்**
**செம்பொன்சேர்**
**கன்னிநன் மாமதில் புடைசூழ் கணபுரத்தென் கருமணியே**
**என்னுடைய இன்னமுதே இராகவனே தாலேலோ''**[20]

என்று இராமனைக் குழந்தையாக எண்ணிக் குலசேகரர் பாடுகின்றார். மேலும் பெரியாழ்வாரின் திருமொழியில் செங்கீரைப் பருவம், சப்பாணிப் பருவம், தளர்நடைப் பருவம், அச்சோப் பருவம், புறம்புல்கல், பூச்சிகாட்டல், முலையுண்ணல், காதுகுத்துதல், நீராட்டம், குழல் வாரக் காக்கையை வாவெனில், கோல் கொண்டு வாவெனல், பூச்சூடல், காப்பிடல் முதலிய பகுதிகள் அமைந்துள்ளன. பெரியாழ்வார் பாடியனவாக அமைந்த இப்பகுதிகள் அனைத்தும் பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையினைச் சார்ந்தன ஆகும். மேலும் பெரியாழ்வாரின் திருமொழியில் வரும் திருத்தாலாட்டு என்னும் பருவத்தில் கண்ணனைப் பின்வருமாறு தாலாட்டுகின்றார்.

''மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி
ஆணிப் பொன்னாற் செய்த வண்ணச் சிறுதொட்டில்
பேணியுனக்குப் பிரமன் விடுதந்தான்
மணிக்குறளனே தாலேலோ
வையமளந்தானே தாலேலோ''[21]

நாச்சியார் திருமொழியில் சிறுமியர் மாயனைத் தஞ்சிற்றில் சிதையேலெனல் (நாமமாயிரம்) முதலிய பகுதிகளும், திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியில் உள்ள சப்பாணிப் பருவம், மாயோன் வெண்ணெய் யுண்ட பகுதிகளும், திருமாலின் பிள்ளைப் பருவத்தையும் போற்றிய தமிழ் இலக்கியங்கள். இவையே பிற்காலத்தில் தோன்றிய பிள்ளைத் தமிழ் என்னும் இலக்கியப் போக்கிற்கு வழிகாட்டியாக அமைந்தன எனலாம்.

## பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சி

தொல்காப்பியர் காலத்தில் பிள்ளைத்தமிழ் இலக்கியக் கூறுகள் தோன்றி மெல்ல வளர்ச்சி பெற்று கி.பி. எட்டாம் நூற்றாண்டில் ஆழ்வார்களின் காலத்தில் பெரியாழ்வாரின் திருமொழியில் தனியொரு இலக்கிய வகையாகும் தகுதி பெற்று, கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஒட்டக்கூத்தர் இயற்றிய குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ் என்னும் முழு சிற்றிலக்கிய வகையாக அமைந்தன. ஒட்டக்கூத்தரால் தோற்றுவிக்கப்பட்ட இப்பிள்ளைத்தமிழ் இலக்கியம் பிற்காலத்தில் பகழிக்கூத்தர், குமரகுருபரர், வீரராகவ முதலியார், சிதம்பர சுவாமிகள், மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்ற அறிஞர்களால் மேலும் செழித்து வளர்ந்து வருகின்றன.

குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் ஆசிரியர் "ஒட்டக கூத்தர். இவர் விக்கிரம சோழன் (கி. பி. **1118—1133**) அவனது. மகன் இரண்டாம் குலோத்துங்கன் (கி. பி. **1133—1150**) இரண்டாம் குலோத்துங்கன் மகன் இரண்டாம் இராசராசன் (கி. பி. **1146—1163**) ஆகிய மூவர் காலத்திலும் வாழ்ந்தவர்"[22] இந்நூல் இரண்டாம் குலோத்துங்கனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது. இந்நூலில் சோழ மன்னர் களுடைய வீரச்செயல்கள், பண்பு நலங்கள் ஆகியன கூறப்பட்டுள்ளன. இந்நூலில் மொத்தம் **103** பாடல்கள் உள்ளன.

## பாடல்கள்—பருவங்களின் எண்ணிக்கை

பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் பத்துப் பருவங் களைப் பாடுமிடத்து, பருவங்கள், பாடல்களின் எண்ணிக்கையை அதிகமாகவும், குறைவாகவும் பாடிய நிலையைக் காணலாம்.

சிவந்தெழுந்த பல்லவன் பிள்ளைத் தமிழில் ஒவ்வொரு பருவத்திற்கும் ஏழு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. திருக்கலசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழில் காப்புப் பருவம் முதல் சிறு பறைப் பருவம் ஈறாகவுள்ள ஒன்பது பருவங்களும். பருவத் துக்கு ஐந்து பாடல்கள் வீதம் மொத்தம் நாற்பத்தைந்து பாடல்களும் பத்தாவது பருவத்தில் ஆறு பாடல்களும் அமைந்துள்ளன. பழனிப் பிள்ளைத் தமிழில் ஒவ்வொரு பருவத்திலும் மூன்று பாடல்கள் உள்ளன.

குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் காப்புப் பருவத்தில் பதினொரு பாடல்களைப் பாடி

உள்ளார். திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் முத்தப் பருவம், வாராணைப் பருவம், அம்புலிப் பருவம் ஆகிய மூன்று பருவங்களும் பதினொரு பாடல்கள் பெற்று, மற்றப் பருவங்கள் பத்துப் பாடல்களைக் கொண்டு உள்ளன. குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழில் அம்புலிப் பருவத்தில் பன்னிரு பாடல்களும் சிறுபறை, சிறுதேர் பருவங்களில் ஏழு பாடல்களும், அமைந் துள்ளன. திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ், திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ் முதலியவற்றில் பருவத் திற்கு ஒவ்வொரு பாடல் வீதம் ஒவ்வொரு நூலிலும் மொத்தம் பத்துப்பாடல்களே உள்ளன, எதுவுமே வரையறை இன்றிப் பருவத்திற்குப் பருவம் மாறுபட்ட எண்ணிக்கையுடன் ஆண்டாள் பிள்ளைத்தமிழ் பாடப் பெற்றுள்ளது.

பிள்ளைத் தமிழ் இலக்கியம் பத்துப் பருவங்களில் அமையவேண்டும் என்பது வரையறையாகும். இருப் பினும் "பதினொரு பருவங்கள் கொண்டதாக ஆண்டாள் பிள்ளைத் தமிழும், பன்னிரண்டு பருவங்கள் கொண்டதாகச் சிவகாமியம்மை பிள்ளைத் தமிழும் அமைந்திருக்கக் காணலாம்"[23] மேற்கூறிய வரையறை யின்றிப் பாடல் அமைந்து இருப்பினும், பாட்டுடைத் தலைவனுக்கு ஏற்றவாறு பாடல்களின் எண்ணிக்கை வேறுபடும் எனப் பிரபந்த மரபியலின் நூற்பாவின் மூலம் தெரிகிறது.

> **"இமையவர் வேதியர் இயல்புடைவைசியர்**
> **சூத்திரர் எனச் சொற்ற ஐவருக்கு**
> **முறையே நூறு முதல் அறுபான்வரை**
> **கணிக்கும் பிள்ளைக்கவியின் தொகையே"[24]**

இந்நூற்பாவில் இமையவர், வேதியர், வைசியர் சூத்திரர், என்று நால்வரைக் கூறி ஐவருக்கு எனத்

தொகை கூறுதலால் அரசர் என்பது விடுபட்டிருக்க லாம். மேற்கூறிய பாடல் "தேவர்களுக்கு நூறும், அந்தணருக்குத் தொண்ணூறும், அரசர்க்கு எண்பதும், வைசியருக்கு எழுபதும், வேளாளருக்கு அறுபதும் என்ற முறையில் பிள்ளைத்தமிழ் பாடப் பெறுதல் வேண்டும் என்பதைக் கூறுகிறது"[25] பிரபந்த மரபியல் தவிரப் பிற பாட்டியல் நூல்கள் இத்தகைய எண்ணிக்கை வரையறையைக் கூறவில்லை. எனவே, பிரபந்த மரபியல் கூறும் எண்ணிக்கை பற்றிய விதி பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் போற்றி இவ்வரை யறையைப் பின்பற்றிப் பாடல்கள் பாடவில்லை.

## பிள்ளைத்தமிழ்—யாப்பு

பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் பெரும்பாலும் ஆசிரிய விருத்தத்தாலேயே அமைந்துள்ளன. ஆசிரிய விருத்தமே பிள்ளைத்தமிழுக்குரிய யாப்பு என்பதை,

> **"அழிவின் அகவலின் விருத்தத்து**
> **அறைதல் பிள்ளைக்கவியாம்"[26]**

எனச் சாமிநாதம் கூறுகின்றது. மேலும் கட்டளைக் கலி, கலிவிருத்தம், ஆகியனவும் பிள்ளைத் தமிழில் இடம்பெறும் என்பதை,

> **"அகவல் விருத்தமும் கட்டளை ஒலியும்**
> **கலியின் விருத்தமும் கவின்பெறுபாவே"[27]**

எனப் பன்னிரு பாட்டியல் உரைக்கின்றது. பிள்ளைத் தமிழில் பஃறொடை வெண்பாவும் சிறுபான்மை இடம் பெறும் என்பதை,

> **"பிள்ளைப்பாட்டே நெடுவெண் பாட்டு எனத்**
> **தெள்ளிதில் செய்யும் புலவரும் உளரே"[28]**

என்று பன்னிரு பாட்டியல் குறிப்பிடுகின்றது. கொச்சகக் கலியும், பஃறொடை வெண்பாவும் பிள்ளைத் தமிழுக்குரிய யாப்பாக இந்திர காவியம் குறிப்பிடு கின்றது.

''கொச்சகக் கலியொடு நெடுவெண் பாட்டே''[29]

இவ்வாறு பல்வேறு வகையான யாப்பு வகை களைப் பிள்ளைத்தமிழுக்குரிய இலக்கணமாகப் பாட்டியல் நூல்கள் குறித்தாலும் பெரும்பாலான பிள்ளைத்தமிழ் நூல்கள் ஆசிரிய விருத்தத்தாலேயே அமைந்துள்ளன.

## பிள்ளைத்தமிழ் நூல்கள் பெயர் பெறுதல்

பிள்ளைத்தமிழ் நூல்கள் பெயர் பெறுவதில் ஒரு வரையறைக்கு உட்பட்டு அமைந்துள்ளன. இறைவன் மீது அல்லது இறைவி மீது பாடப்பெற்ற பிள்ளைத் தமிழ் நூல்கள் அவர்களின் பெயராலோ, எழுந்தருளி யிருக்கும் ஊர்களின் பெயரோடோ இணைத்துக் கூறப் படுகின்றன. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், கலைமகள் பிள்ளைத் தமிழ் என வரும் நூல்கள் இறைவன், இறைவி பெயரால் அமைந்துள்ளன. சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், தில்லை சிவகாமியம்மை பிள்ளைத் தமிழ், குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களில் இறைவன் அல்லது இறைவி பெயரோடு ஊரின் பெயரும் இணைந்துள்ளன. திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ் திருத்தணிகை பிள்ளைத் தமிழ் முதலிய நூல்களில் ஊரின் பெயர் மட்டும் அமைந்திருக்கக் காணலாம்.

மேலும், மன்னர்கள், வள்ளல்கள் மீதும் பாடப் பெற்ற பிள்ளைத்தமிழ் நூல்களும் அவர்களின் பெயராலோ, அவர்களின் ஊர்ப் பெயர்களோடோ இணைத்து அழைக்கப்படுகின்றன. குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், திருவாடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் முதலியன இம்முறையில் பெயர் பெற்றவையாகும்.

## சிவனும் பிள்ளைத்தமிழும்

'குழவி மருங்கினும் கிழவதாகும்' என்ற தொல்காப்பிய நூற்பா விளக்கத்தில் 'மக்கட் குழவியாகிய ஒரு மருங்கே கொள்க' என்று நச்சினார்க்கினியர் விளக்கம் உரைத்திருந்தாலும், பிற்காலத்தில் தெய்வக் குழவிக்கும் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடுகின்ற வழக்கம் ஏற்பட்டது. ஆயினும், திருமால், அம்மை, முருகன், விநாயகர் முதலிய தெய்வங்களுக்குத்தான் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடப்பட்டன. சிவபெருமான் பிறவாயாக்கைப் பெருமான். எனவே, சிவபெருமானுக்குப் பிள்ளைத்தமிழ் பாடப் பெறவில்லை என்பது அறியத்தக்கது ஆகும்.

## பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் தனிச் சிறப்பு

தமிழ் இலக்கியத்தில் பிள்ளைத்தமிழ் வகைக்குத் தனிச் சிறப்பு உண்டு. "தூது, உலா முதலிய சிற்றிலக்கியங்கள் இந்திய மொழிகளிலும், உலக மொழிகளிலும் நிலவுகின்றன. ஆனால் பிள்ளைத்தமிழ் இலக்கியம் தமிழ் மொழிக்கேயுரிய இலக்கிய வகை"[30] என்பர். மற்ற மொழி இலக்கியங்களில் பிள்ளைத்

தமிழ் இலக்கியக் கூறுகள் விளங்கினாலும், தமிழ் மொழியில் உள்ளது போன்று தனிச் சிற்றிலக்கிய வகையாகத் திகழவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

## பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் பருவங்களின் பொருள்

பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் காணப்படும் பருவங்களின் பொருள், அமைப்பு பற்றி இங்குக் குறிப் பிடப்படுகின்றன. பருவங்களில் எத்தனை பாடல்கள் பாட வேண்டும் என்று அமைப்பு முறை குறித்து இலக்கண நூல்கள் கூறியுள்ளன. ஆனால், இன்ன பருவத்தில் இந்தச் செய்திகள் பற்றித்தான் வர வேண்டும் எனப் பொதுவான விதிகளைக் கடைப் பிடித்தனர் அறிஞர்கள். எனவே ஒவ்வொரு பிள்ளைத் தமிழ் இலக்கியத்திலும் பருவங்களில் காணப்படும் பொருள் பொதுவானவையாக அமைந்திருப்பதைக் காணலாம். ஒவ்வொரு பருவத்திலும் பாடல்களின் எண்ணிக்கை மாறுபடினும் அப்பருவத்தின் பொருள் குறித்தே அனைத்துப் பாடல்களும் அமைந்திருக்கும்.

பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் காணப்படும் பருவங்கள் முறையே: 1. காப்பு, 2. செங்கீரை, 3. தால், 4. சப்பாணி, 5. முத்தம், 6. வருகை, 7. அம்புலி, 8. சிற்றில், 9. சிறுபறை, 10. சிறுதேர், 11. நீராடல், 12. அம்மானை, 13. ஊசல் ஆகியன வும் மேலும் பன்னிருபாட்டியல் பெண்பாற் பிள்ளைத் தமிழுக்கு 1. சிற்றில் இழைத்தல், 2. சிறுசோறாக்கல், 3. குழமகன், 4. ஊசல், 5. காமன் நோன்பு என்னும் பருவங்களைக் குறித்துள்ளன. காப்புப் பருவம் முதல்

சிறுதேர்ப் பருவம் ஈறாகவுள்ள பருவங்கள் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்குரியன. காப்பு முதல் அம்புலி வரையிலும், நீராடற் பருவம், அம்மானைப் பருவம், ஊசற் பருவம் ஆகியன பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குரியன. பெரும்பாலான பிள்ளைத்தமிழ் நூல்களில் இப்பருவங்களையே காண முடிகின்றன.

## காப்புப் பருவம்

பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் முதற் பருவம் காப்புப் பருவம் ஆகும். இப்பருவம் குழந்தையின் மூன்றாம் திங்களில் நிகழ்வது. பிள்ளைத்தமிழ் இலக்கியம் சிறக்கவும், பாட்டுடைத் தலைவனையோ, தலைவியையோ, காக்குமாறும் இறைவனை வேண்டிக் கொள்வது ஆகும். காப்புப் பருவத்தில் வணங்கப் பெறும் தெய்வங்களைப் பாட்டியல் நூல்கள் கூறுகின்றன.

**''திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்**
**பொருவேல் முருகன் பரிதிவடுகன்**
**ஏழுவகை நங்கையர் இந்திரர் சாத்தன்**
**நிதியவன் நீலி பதினொரு மூவர்**
**திருமகள் நாமகள் திகழ்மதி என்ப**
**மருவிய காப்பினுள் வருங்கடவுளரே''**[31]

என்னும் பன்னிருபாட்டியல் நூற்பா, திருமால், சிவன், பிரம்மன், விநாயகன்,முருகன், குபேரன், நீலி, முப்பத்து மூன்று தேவர், திருமகள், நாமகள், சந்திரன் ஆகிய இவர்கள் காப்புப் பருவத்தில் வாழ்த்தப் பெறும் கடவுளர்கள் ஆவர்.

இவர்களில் காப்புப் பருவத்தில் காக்கும் தொழிலை மேற்கொண்டுள்ள திருமாலே காப்புப் பருவத்தின் முதற் கடவுளாகப் போற்றப் பெறும் தெய்வமாக இருக்க வேண்டும் எனப் பாட்டியல் நூல் வலியுறுத்து கின்றது.

**''காப்பின் முதல் எடுக்கும் கடவுள்தானே**
**பூக்கமழ் துழாய்முடி புனைந்தோன் ஆகும்''[32]**

என்பது பன்னிரு பாட்டியல் நூற்பா. மேலும் திருமாலைக் காப்புப் பருவத்தில் முதற் கடவுளாகப் பாட வேண்டுவதற்கான காரணங்களைப் பன்னிரு பாட்டியல் நூற்பா கூறுகின்றது.

இதனை,

**''அவன்றான்**
**காதற்கிழவன் ஆகலானும்**
**பூவின் கிழத்தியைப் புணர்தலானும்**
**முடியும் கடகமும் மொய்பூந்தாரும்**
**குழையும் நூலும் குருமணிப்பூணும்**
**அணியும் செம்மல் அகலானும்,**
**முன்னுற மொழிதற்குரியன் என்ப''[33]**

திருமால் காத்தற் கடவுள். முடி, கடகம், தார், குழை, நூல், பணிப்பூண் ஆகியவை அணிந்த செம்மல். எனவே திருமால்தான் முன்னுறமொழிதற்கு உரியவன் என்று பன்னிருபாட்டியல் நூற்பா கூறுகின்றது.

இவ்வரையறை இருப்பினும், இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட சில பிள்ளைத் தமிழ் நூல்களில் காப்புக்குரியவர் திருமாலாக அமையும் பொழுது அவனை விடுத்து வேறு கடவுளர்களையோ, அடியவர்களையோ காப்பாகக் கூறும் முறையும்

உள்ளது. சேக்கிழார் பிள்ளைத்தமிழில் காப்புப் பருவத்தில் திருத்தொண்டர்த் தொகையில் திருத் தொண்டர்களையே காப்புக் கடவுளர்களாகக் கூறப் பட்டுள்ளது.

"நோயுற்ற குழந்தைகளை வழிபடும் கடவுள் முன் கிடத்தி மஞ்சள் துணியில் நெல், துவரை முதலிய வற்றை முடிந்து அம் முடியினைக் காப்பாக அக்குழந்தையின் கையில் அணிவது வழக்கமல்லவா? காப்புக்காக அமைந்தமையின் அத்துணி முடிப்பு காப்பாகவே ஆயிற்று. இக்காப்பே காலப்போக்கில் பொன்னாலும் வெள்ளியாலும் கைகளை அழகு படுத்தும் காப்புக்களாயின. இவ்வாறு பாட்டுடைத் தலைவன் நோயற்று வாழவும் வளமும் நலமும் பெற்ற குழந்தையாக இருக்க வேண்டியும் பிற கடவுளரை வாழ்த்துவது காப்பாகும்"[54] என்பர்.

காப்புப் பருவத்தில் விரிசடைக் கடவுளும், மங்கையர் எழுவரும் பாடும் வகை குறித்துப் பன்னிருபாட்டிய லும் நவநீதப்பாட்டியலும் குறிப்பிடுகின்றன.

**"விரிசடைக்கடவுளும் வேய்த்தோய் எழுவரும்**
**அருளொடு காக்கவென்றறை யுங்காலைக்**
**கொலையும் கொடுமையும் கூறாராகிப்"[55]**

வேய்த்தோள் எழுவர் என்பது அபிராமி, மயேச்சுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி இவர்களைக் காப்பில் வைத்துப் பாடுகையில் அவர்கள் அரக்கர்கள் முதலியவர்களைக் கொன்றதை யும் அவர்கள் அக்கொடியவர்கள்பால் இயற்றிய கொடுமையையும் கூறாமால் மங்கலமாகப் பாட வேண்டும் என்பது மரபு ஆகும்.

## செங்கீரைப் பருவம்

பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் இரண்டாவதாக இடம் பெறுவது செங்கீரைப் பருவமாகும். இப்பருவம் குழந்தையின் ஐந்தாம் திங்களில் நிகழ்வது. கீர் என்பதற்குச் 'சொல்' எனப் பொருள் கொண்டு, தொடையமைதிகள் இல்லாத ஒன்றைச் செந்தொடை என்று கூறுவது போலச் சொல்லுக்குரிய அமைதியில்லாததைச் செங்கீரையென்றார் என்றும் இது குழந்தைகள் மழலையைக் காட்டிலும் இளமைப் பருவத்தையுடையதான பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பதாகுமென்றும் ஒரு சாரார் கருதுவர்.

''ஆடுக செங்கீரை என்னும் செய்யுள் வழக்கைக் கொண்டு குழந்தை ஒரு காலை முடக்கி ஒரு காலை நிமிர்த்தி ஆடுதலாகிய பருவத்தைக் குறிப்பதாகும்''[68] என்பர். குழந்தை அவ்வாறு ஆடுகின்றபொழுது சுற்றத்தார், செவ்வாய் சொற்களைச் சொல்ல வேண்டுமென்று வேண்டிக் கொள்வதாக இரண்டு கருத்துகளையும் சேர்த்தமைத்துப் பாடுதல் செங்கீரைப் பருவம் எனலாம்.

## தாலப் பருவம்

பிள்ளைத்தமிழில் மூன்றாம பருவமாகத் தாலப் பருவம் விளங்குகின்றது. தாலப் பருவம், செங்கீரைப் பருவம் ஆகிய இரண்டும் வரிசை முறை மாறி வருதலும் உண்டு. இப்பருவம் குழந்தையின் ஏழாம் திங்களில் நிகழ்வது. தால் என்பதற்கு நாக்கு என்று பொருள். நாக்கை அசைத்துத் தாலாட்டுப் பாடிக் குழந்தைகளைத் தூங்க வைப்பது தாலாட்டாகும். தாலாட்டு என்பது.

பின்னர் தால் என மருவி வழங்கலாயிற்று. தாலே தாலேலோ எனக் குழந்தைகளுக்குத் தாலாட்டுப் பாடும் பொழுது அக்குழந்தைகளின் சிறப்புக்களை எடுத்துக் கூறிப் பாடுவது வழக்கம்.

### சப்பாணிப் பருவம்

நான்காவது பருவமாகிய சப்பாணிப் பருவம் குழந்தையின் ஒன்பதாம் திங்களில் நிகழ்வதாகும். குழந்தை நிமிர்ந்து அமர்ந்திருக்கும் அமைப்பைச் சப்பாணி என்று கூறும் வழக்கம் உண்டு. அதனால் இது சப்பாணிப் பருவமாயிற்று என்றும் சப்பாணி என்பதைச் சக+பாணி எனப் பிரித்து 'சக' என்பது 'உடன்', 'பாணி' என்பது கை. எனவே இரண்டு கைகளையும் சேர்த்துக் கொட்டுதலே சப்பாணி ஆயிற்று என்றும் 'ச' எனில் சேர்த்தல் என்றும் பொருள் கொண்டு கைகளைச் சேர்த்து ஒலியெழுப்புதல் என்றும் அறிஞர் விளக்குவர். இப்பருவத்தில் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையை உட்கார வைத்து அவனின் சிறப்புக்களையெல்லாம் எடுத்துக் கூறி இன்ன சிறப்புடைய கைகளினால் கை கொட்டி இனிய ஓசை எழுப்புக என்று வேண்டப்படும்.

### முத்தப் பருவம்

ஐந்தாம் பருவமாகிய முத்தப் பருவம் குழந்தையின் பதினோராம் திங்களில் நிகழ்வது. குழந்தையை வைத்துக் கொண்டு அதன் மெல்லிய இதழ்களால் முத்தம் பெற்று மகிழ்தல் முத்தப் பருவமாகும். குழந்தையை முத்தம் தருக எனத் தாயரும் பிறரும் உறவினரும் வேண்டுதல் மரபு. முத்தம் என்னும் சொல்

முத்தினையும் குறித்தலின் முத்தப்பருவத்தில் புலவர்கள் பிற இடங்களில் கிடைக்கும் பலவகை முத்துக்களிலும் உன்னுடைய வாய் முத்தமே சிறந்தது என்று கூறி, அதனால் உன்னுடைய முத்தம் தருக என்ற பொருள் அமைத்துப் பாடுதல் வழக்கம். முத்தப் பருவம் பாடும் போது விலை மதிப்புள்ள முத்துக்களின் இயல்புகளை யெல்லாம் எடுத்துக் கூறி விலைமதிப்பில்லா உன்னுடைய முத்தமே மிக உயர்ந்த முத்தம் எனப் போற்றியும் பாடுவர்.

## வருகைப் பருவம்

இது வாரானைப்பருவம் என்றும் வழங்கப் பெறும். இப்பருவம் பதின்மூன்றாம் திங்களில் ஆறாவது பருவ மாக அமைகின்றது. குழந்தை தத்தித் தத்தித் தளர் நடை இட்டு அருகில் வரும்; அக்குழந்தையை வருக! வருக! என மெய் மகிழ அழைக்கும் பருவமே வருகைப் பருவமாகும். குழந்தையை வருக! வருக! என வரவேற்கும் போது அதன் சிறப்புகளையெல்லாம் எடுத்துச் சொல்லி அழைப்பது வழக்கம்.

## அம்புலிப் பருவம்

பிள்ளைத்தமிழின் ஏழாம் பருவம் அம்புலிப் பருவ மாகும். குழந்தையின் பதினைந்தாம் திங்களில் நிகழ்வது. அம்புலி என்பது சந்திரன் ஆகும். சந்திரனைத் தன் குழந்தையுடன் விளையாட வருமாறு அழைக்கும் தாயார் இன்றும் உள்ளனர். பாட்டுடைத் தலைவன் அல்லது தலைவியோடு விளையாட வருமாறு அம்புலியை அழைப்பதாகப் பாடுவது அம்புலிப் பருவ

மாகும். அம்புலியை விளையாட அழைக்கும போது தாய் நால்வகை உபாயங்களையும் கையாளுகின்றாள். சாம பேத தான தண்டம் என நான்காகக் காட்டுவர். முதல் நிலை இன்னின்ன வகையில் நீயும் என் செல்வ னும் அல்லது செல்வியும் ஒத்திருக்கின்ற காரணத்தால் உன்னைத் தனக்குச் சரிநிகர் சமானமாக எண்ணி விளையாட அழைப்பதையறிந்து விளையாட வா என அழைப்பது. நீயும்இவனும் இன்னின்ன வகையில் வேறு படுகின்றீர் என்றாலும் இவன் அருள் உள்ளம் வாய்ந் தவன், ஆதலின், உன்னை விளையாட அழைக் கின்றான், எனவே வருக என்று அழைப்பது இரண்டாவது நிலை. மூன்றாவது நிலை நீ இவனொடு விளையாட வந்தால் இன்னின்ன நலன்களைப் பெறு வாய் என்று காட்டுவது. நான்காவதாகிய நிலை இறுதியில் இத்தனை வகையில் வருந்தி அழைத்தும் வாராதிருப்பது எதற்கோ? வரவில்லையெனில் இன்னின்ன வகையில் தண்டனை பெறுவாய் என்று ஒறுக்கும் முகத்தான் அழைப்பது. "இவ்வாறு நால் வகை உபாயங்களால் அழைக்கும் போது சிலேடை முதலிய அணிகள் அழகுற அமையப் பாடும் புலவர் திறனை இப்பருவத்தில் காணலாம்.[57] மேலும் அம்புலிப் பருவம் புலவர்களின் புலமையை எடுத்துக் காட்டும் பருவமாக விளங்குவதால், நால்வகை உபாயங்கள் பற்றிப் பாடும் போது புலமைமையப் பயன்படுத்திச் சிறப்பாகப் பாட வேண்டும். அம்புலி புலவர்க்குப் புலி என்று கூறுவர்.

மேற்குறிப்பிட்ட ஏழு பருவங்களும் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கும், ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவான்வை. அடுத்து வரும் மூன்று பருவங்களும்

வேறுபடுகின்றன. ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கு, சிற்றில் சிதைத்தல், சிறுபறை முழக்கல், சிறுதேர் பருவம் ஆகியனவும் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கு நீராடற்பருவம், அம்மானைப்பருவம், ஊசல் ஆகியன வும் வரும். இங்கு முதலில் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய மூன்று பருவங்கள் கூறப்படுகின்றன.

## சிற்றில் சிதைத்தல்

இப்பருவம் பிள்ளைத்தமிழின் எட்டாவதாக அமையும். இது பாட்டுடைத் தலைவனின் பதினேழாம் திங்களில் நிகழ்வது. பெண் குழந்தைகள் அரும்பாடு பட்டுக் கட்டிய சிற்றிலை ஆண்மகனால் சிதைக்கப் படும்பொழுது அதைக் கட்டிய பெண் மக்கள் என்னுடைய சிற்றிலை சிதைக்க வேண்டாம் எனப் பாடப் பெறுவதே இப்பருவமாகும். பெற்றோரும், உறவினரும் பாடுவதாகப் பிற பருவங்கள் அமைய, இப்பருவம் மட்டும் சிறுமியர் பாடுவதாக அமைப்பது இயல்பு.

## சிறுபறைப் பருவம்

பிள்ளைத்தமிழின் ஒன்பதாவது பருவம் சிறுபறைப் பருவமாகும். இது குழந்தையின் பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வதாகும். இதில் பாட்டுடைத் தலைவனைச் சிறுபறை முழக்கும்படி வேண்டப் பெறும். குழந்தைகளிடம் சிறிய கருவிகளைக் கொடுத்து முழக்குமாறு செய்து மகிழ்விப்பதே சிறு பறைப் பருவமாகும்.

## சிறுதேர்ப் பருவம்

இப்பருவம் பத்தாவது பருவமாக அமையும். குழந்தையின் இருபத்தியோராம் திங்களில் நிகழ்வது. குழந்தை தனது நடைப் பயிற்சிக்கு உறுதுணையாக உதவும் சிறு தேரினை ஓட்டி மகிழச் செய்வர். தேரினை உருட்டி மகிழும்படி குழந்தையை வேண்டிப் பாடுவது இப்பருவமாகும்.

இனி, பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய மூன்று பருவங்களான நீராடற் பருவம், அம்மானைப் பருவம், ஊசல் பருவம் என்பனவாகும்.

## அம்மானைப் பருவம்

பெண்பாற் பிள்ளைத்தமிழின் எட்டாம் பருவமாகும். குழந்தையின் பதினேழாம் திங்களில் நிகழ்வது. அம்மானைக் காய்கள் கொண்டு விளையாடுவது இப்பருவத்தின் தன்மை. பாட்டுடைத் தலைவியைத் தோழிகள் முத்தம்மானை முதலிய அம்மானைக் காய் கொண்டு ஆடியருளுமாறு கூறுவதாகும்.

பெண்களுக்கேயுரிய விளையாட்டினுள் இதுவும் ஒன்று. கலம்பக உறுப்புக்களுள் அம்மானையென வருவது மகளிர் மூவர் கூடித் தம் நாட்டுத் தலைவனை அல்லது காதலரைக் குறித்தோ ஒருத்தி வினா எழுப்ப மற்றவள் அதற்கு விளக்கம் கூறப் பின்னொருத்தி இவ்விருவர்க்கும் விடை கூறி அம்மானைக் காய்களை

மேலே வீசிப் பிடித்துக் கொண்டு விளையாடுவதாக இறுதியில்அம்மானை என்ற சொல் வரப் பாடுவதாகும்.

### கழங்காடற் பருவம்

சில பிள்ளைத்தமிழ் நூல்களில் அம்மானைப் பருவத்திற்குப் பதிலாகக் கழங்காடற்பருவம் வரும். கழங்காவது, மரம், ஈயம் முதலிய பொருள்களால் உருண்டையாகப் பந்து போன்று செய்து அதனை மகளிர் மேலே ஒன்றன்பின் ஒன்றாக எறிந்து கையாற் பிடித்து விளையாடுவது.

### நீராடற் பருவம்

இப்பருவம் குழந்தையின் பத்தொன்பதாம் திங்களில் நிகழும். தலைவியை நீர் நிலையிற்சென்று புனல் விளையாட வேண்டுமென்று வேண்டுவதாகும். இச்செய்தி நல்ல கணவன்மாரையடைய கன்னியர்கள் நோற்கும் மார்கழி நோன்பைத் தழுவியுள்ளது. "இன்றும் மலையாள நாட்டுப் பெண்கள் அருணோதய காலம் வரை நீராடுவதில் காலம்போக்கிப்பின்னர்க் கரையேறி நன்கு உடலைத் துடைத்துக்கொண்டு தூய்மையான அலங்கார உடைவகைகளையணிந்து கண்களுக்கு மையிட்டு,நெற்றியில் திலகமிட்டு,தாம்பூலம் போட்டுத் தம்மை ஒப்பனை செய்வர். பின்னர் ஊஞ்சலாட்டத்தைத் தொடங்குவர்"[38] இத்தகைய ஆட்டங்கள் பெண்களுக்கே உரியதென்பது இச்செய்தியால் விளங்குகின்றது.

### ஊசற்பருவம்

இப்பருவம் குழந்தையின் இருபத்தோராம் திங்களில் நிகழும். பெண்பாற் பிள்ளைத்தமிழின் பத்தாம் பருவம்

ஆகும். குழந்தையை ஊஞ்சலில் அமர்த்தி அக்குழந்தையின் சிறப்புகளையெல்லாம் எடுத்துரைத்துக்கொண்டே ஊஞ்சலை ஆட்டி அதனை மகிழ்விப்பர் என இப்பருவத்தை அமைத்துப் பாடுவர்.

**கலைமகள் பிள்ளைத் தமிழ்**
**இலக்கணப் பொருத்தம் :**

முன் இயலில் குறிப்பிட்டதுபோன்றே பிள்ளைத் தமிழ் இலக்கணக்கத்தின்படி கலைமகள் பிள்ளைத் தமிழிலும் காப்புப்பருவம் முதற்கொண்டு அம்புலிப் பருவம் வரை உள்ள பொதுவான ஏழு பருவங்களும் இறுதியில் பெண்பாற் பிள்ளைத் தமிழிற்குரிய பருவங்களான அம்மானை, நீராடல், பொன் ஊசற் பருவங்கள் இடம்பெற்றுள்ளன. காப்புப் பருவத்தில் பாட்டுடைத் தலைவியாகிய கலைமகளைக் காக்குமாறு முதலில் காத்தற் கடவுளாகிய திருமாலைப் பாட்டியல் நூல்கள் கூறுவதற்கு ஏற்ப வேண்டுகிறார். பின்னர் சிவபெருமான், திருமகள், பார்வதி, பிரம்மதேவர், விநாயகர், முருகப்பிரான், இந்திரன், தேவர்கள் முதலானோர்களை வேண்டுகிறார். கன்னியர் எழுவர் குறித்துப் பாடும் பொழுது அவர்கள் இயற்றிய கொடுமைகள், கொலைத் தொழில் நீக்கி மங்களமாகப் பாடவேண்டும் என்புதற்கு ஏற்றவாறு கன்னியர் எழுவரைக் குறித்துப் பாடியுள்ளார். அம்புலிப்பருவத்தில் ஆசிரியர் சாம, பேத, தான, தண்டம் என்னும் நால்வகை உபாயங்களையும் நயமுற அமைத்துப் பாடியுள்ளார்.

பிரபந்த மரபியலில் கடவுள் தேவர்களுக்குப் பிள்ளைத் தமிழ் பாடும்பொழுது நூறு பாடல்கள் பாடவேண்டும் என்று குறிப்பிடுகின்றது. இதற்கு

ஏற்பக் கலைமகள் பிள்ளைத்தமிழிலும் பாடல்களின் எண்ணிக்கை அமைந்துள்ளது. பிள்ளைத்தமிழின் யாப்பு ஆசிரிய விருத்தத்தில் அமைந்திருக்க வேண்டும் என்று இலக்கண நூல்கள் கூறுவதற்கு ஏற்றவாறு கலைமகள் பிள்ளைத்தமிழும் ஆசிரிய விருதத்திலேயே அமைந்துள்ளது. மேற்குறித்த பிள்ளைத் தமிழ் இலக்கணத்திற்கு ஏற்பக் கலைமகள் பிள்ளைத் தமிழ் நூல் அமைந்துள்ளதை ஒப்புநோக்குமிடத்து இந்நூலும் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று எனலாம்.

# குறிப்புகள்

1. தொல் செய்யுளியல் நூ. 236
2. கு. முத்துராசன் மேற்கோள் நூல்
பிள்ளைத் தமிழ் இலக்கியம் ப. 7
3. பிரபந்த மரபியல் ப. 5
4. மேற்படி ப. 4
5. ச.வே. சுப்பிரமணியன் தமிழ் இலக்கிய
வகையும் வடிவும் ப. 76
6. முத்து சண்முகன் நிர்மலாமோகன்—
சிற்றிலக்கியங்களின் தோற்றமும்வகையும்
ப. 111—138
7. மு. சண்முகம் பிள்ளை
சிற்றிலக்கிய வளர்ச்சி ப. 4
8. ந.வீ.செயராமன் சிற்றிலக்கியத்திறனாய்வு ப. 168
9. தொல். பாடாண் திணை நூ. 24
10. மேற்படி இளம்பூரணர்
11. மேற்படி நச்சினார்க்கினியர்
12. புறப்பொருள் வெண்பா மாலை
பாடாண்திணை நூ.05
13. சிதம்பரப்பாட்டியல் நூ. எண். 28
14. பன்னிருபாட்டியல் நூ. எ. 101
15. சிற்றிலக்கண நூற்றிரட்டு மேற்கோள்
நூல் கழகம் ப, 147
16. பன்னிருபாட்டியல் நூ. எ. 102
17. வெண்பா பாட்டியல் நூ. எ. 7
18. பன்னிரு பாட்டியல் நூ. எ. 105
19. இலக்கண விளக்கப்பாட்டியல் நூ. எ. 47
20. பெருமாள் திருமொழி 719
21. பெரியாழ்வார் திருதாலாட்டு 44

22. ந.வீ. செயராமன் சிற்றிலக்கிய செல்வம்
ப.137—138
23. கலைக்களஞ்சியம் தொகுதி 7
24. பிரபந்த மரபியல் நூ. எ. 3
25. ந.வீ. செயராமன் பாட்டியலும் இலக்கிய வகைகளும் ப. 62
26. கு. முத்துராசன் மேற்கோள் நூல் பிள்ளைத் தமிழ் இலக்கியம் ப. 28
27. பன்னிருபாட்டியல் நூ. எ. 110
28. பன்னிருபாட்டியல் நூ. எ. 111
29. கு. முத்துராசன் மேற்கோள் நூல் பிள்ளைத் தமிழ் இலக்கியம் ப. 28
30. மு. வரதராசன் இலக்கிய மரபு ப. 22
31. பன்னிருபாட்டியல் நூ. எ. 106
32. பன்னிருபாட்டியல் நூ. எ. 107
33. பன்னிருபாட்டியல் நூ. எ. 108
34. சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் கழகம் ப. 20
35. பன்னிருபாட்டியல் நூ. ப. 109
36. சி. பாலசுப்பிரமணியன் கட்டுரைவளம் ப. 124
37. சிற்றிலக்கிய சொற்பொழிவுகள் ப. 22—23
38. தி. சந்திரசேகரன் பிள்ளைத்தமிழ்க்கொத்து அணிந்துரை

# 3. கலைமகள் பிள்ளைத்தமிழில் சமயம்—சமுதாயம்

**சமயம் :**

"சமயம் என்பது மனிதனுக்கும் மனித நிலைக்கும் மேற்பட்டதாக உள்ள ஆற்றல் அல்லது ஆற்றல் களுக்கும் உள்ள தொடர்பு பற்றியதாக எண்ணப் படுகின்றது,"[1] "சமைக்கப்பட்டதுதான் சமயம். மனிதன் தன்வாழ்வு வளம் பெறவும், மாக்கள தன்மை யிலிருந்து விடுதலை பெற்று மக்கள் தன்மைபெறவும் வழியாகச் செய்யப்பட்டது அல்லது சமைக்கப் பட்டது தான் சமயமாகும்"[2] சமயம் என்ற சொல்லிற்கு "எல்லை, காலம், தருணம், வேளை, மதம், உடன்படிக்கை, தீட்சை, மரபு"[3] என்று பல பொருள் உண்டு கடவுளை அடிப்படையாகக் கொண்டு மக்களின் வாழ்க்கையை ஒழுங்கு படுத்துவதற்காக ஆக்கப்பட்ட ஒன்றே சமயம் எனலாம். இது மக்களின் சிக்கல் முதலியவற்றைத் தீர்த்து அமைதிப்படுத்தி நன்னெறி யில் அழைத்துச் செல்கிறது. எனவே சமயம் மனிதனின் நல்வாழ்வுக்காக அமைந்த ஒன்றாகும்.

## கலைமகள் பிள்ளைத்தமிழில் சமயங்கள்

இந்நூலின் ஆசிரியர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர். எனவே காப்புப்பருவத்திற்கு முன்னர் வரும் பழிச்சினர் பரவல் என்னும் பகுதியில் வைணவ சமய ஆழ்வார் ஆசாரியர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். மேலும் சைவ சமயச் செய்திகளும் நூலுள் காணப் படுகின்றன. கலைமகள், பிரம்மன், இந்திரன், சசி இவர்களைப் பற்றிய செய்திகளும் இடம் பெற்றிருக் கின்றன.

## திருமால்

வைணவ சமயத்தினர் வழிப்படும் திருமால் உலக உயிரினங்களின் துன்பங்களை நீக்கிக் காக்கும் தெய்வம் ஆகும். திருமாலின் அவதாரங்களாகக் கருதப்படும் கண்ணன், விஷ்ணு, இராமன் என்று வைணவ சமயத் தார் வழிபடுகின்றனர். பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் பாட்டுடைத் தலைவன் அல்லது தலைவியைக் காப்புப் பருவத்தில் காக்குமாறு திருமாலைக் முதலில் பாடுவது மரபு. மேற்கூறிய மரபுப்படியே இந்நூலாசிரியரும் காப்புப்பருவத்தில் கலைமகளைக் காக்குமாறு திருமாலை வேண்டுகிறார்.

"..................................

மருமிகுத்தமடுத் தனுள் அலறும் அத்தியர்ப்பரு
வரல்ஒழித்தருள் வித்தகர் தலைஎத்தியே
மனமடக்கிடு மெய்த்தவர் கனிய வைத்த மனத்தினில்
மலரவிட்ட பதத்துணை மலர் போற்றுவாம்
.............................................."

என்னும் பாடலில் கலைமகளைக் காக்க வேண்டித் திருமகள் வளரும் மார்பினரும், சீதா பிராட்டியோடு காட்டிற்குச் சென்றவரும் மடுவில முதலைவாய்ப்பட்டு அலறிய யானையின் துயர் ஒழித்தவருமான திருமாலின் "திருவடிகளைப் போற்றுவோம் என்று திருமாலை வேண்டுகிறார.

## பத்து அவதாரங்கள்

திருமாலின் திருவடிகளை உள்ளத்தில் கொண்ட அடியவர்களின் துன்பம நீங்க, திருமால் பத்து அவதாரங்கள் எடுத்து ஞானம வழங்கி அவர்களின் துன்பத்தைப்போககினர். இதனை,

"..................................
படியிட்ட அடிவைத்த இதயத்தர் துயர்விட்ட
படிரத்ன முடிவைத்து மேல்
பலர்மெச்சும் ஒரு பத்து வடிவைக்கொடறிவுய்த்த
பதுமச்செவடி பெற்றவன்
.................................."[5]

என்று சப்பாணிப் பருவத்தில் குறிபபிடுகினறார.

## படைக்கும் தொழில்

சிவபெருமானால் அழிககப்பட்ட உலகு முன் போன்று விளங்கச் சங்கு சக்கரங்களைக் கைகளில் ஏந்திய திருமாலின் அருளால் பிரம்மனின் படைக்கும் தொழில் நடைபெறுகின்றது எனபதை,

"..................................
பணிலம் திகிரி கைக்கொண்ட
பகவான் அருளால் சிறவொழுகும்
கொங்கே றியவெண் கமலத்துள்
கொழுநன் ஈங்குப் படைத்தொழில்
..................................

என்னும் பாடலில் திருமாலின் சிறப்பினைக் கூறுகின்றார்.

## திருமாலின் பெயர்கள்

1. திருமாலிற்கு இருடிகேசன் என்று பெயர். இருடிகேசன் என்பதன் பொருள் அற்ப வழியிற் செல்லும் மனம அடங்கும் வண்ணம் ஐம்புலன்களையும் தம் வயப்படுத்தியவர்களால் போற்றப்பெறுபவன்" என்பதாகும்.

2. விஷ்ணு என்னும் பெயருக்குத்தான் இல்லாத பொருள் எங்கும் இல்லை என பொருள் ஆகும்.

3. பதுமநாபன் என்பது படைப்புத்தொழிலுக்குப் பிரம்மனைப் படைத்த பதுமத்தை 'உந்தியில் உடையவன் எனப் பொருள் தரும். எனவே திருமால் பதுமநாபன் என்னும் பெயர் உடையவன்.

4. கண்ணுள் மணிபோன்று விளங்கும் கண்ணன் என்பது திருமால் ஆகும் என்பதை,

''புல்வழி செலூஉமனம் அடங்குறப் பொறிவாய்ப்
புலன்கள் ஐந்தையும் ஒறுத்துப்
போற்றுவார் போற்றவரும் இருடிகேசன்பிரான்
புக்குறூஉம் தான் இலாமே

மல்குறூ உம் பொருள் ஒன்றும் இன்றென்ன
வாழ்விண்டு
வளைகடல் உடுத்த புவியம்
மற்றும் படைத்திட அயன்தனை அளித்தொளி
வயங்குறூ உம் பதுமநாபன்
செல்வழி எலாம் சென்றுடன் கேடனாகிநம்
தீமனம் செழித்து மருவிச்
செறிகண்ணுள் மணிஎனும் கண்ணனே நிகர்எனச்
செப்புமணி யால் செய்ததால்
..........................................''7

என்னும் பாடலில் திருமாலின் பெயர்கள் குறித்து அம்மானைப் பருவத்தில் பாடியுள்ளார்.

## திருமகள்

திருமகள் திருமாலின் துணைவியார் ஆகும். திருமகள் திருமாலின் காத்தற் தொழிலுக்கு உறுதுணையாக நின்று உலக உயிரினங்களின் துன்பத்தை நீக்கி நல் அருள் புரிபவள். தேவர்கள் திருப்பாற் கடல் கடையும் போது திருமகள் உயிர் அளிக்கும் அமுத கலசத்தோடும், சந்திரனோடும் வெளிவரக் கண்ட திருமாலின் உள்ளம் மகிழ்ந்தது. திருமாலின் திருமார்பில் அகலாது வாழும் கருணை மிகுந்த திருமகளைக் கலைமகளைக் காக்குமாறு வேண்டி,

''திரைபாற் கடலை மதித்திடுநாள்
தேவர் தமதாருயிர் வழங்கும்
சீரார் அமுத கும்பமொடும்
சீத முறுவெண் மதியினொடும்

கரைப்பாற்கண்டுகளி கொண்ட
கமல நாபி யம்பகவன்
களினார் அகலத் தகலாத
கருணை வடிவை மிகத்துதிப்பாம்—
……………………………………"[8]

என்று காப்புப்பருவத்தில் திருமகளை வேண்டுகிறார். மேலும் அம்மானைப் பருவத்தில் "பாற்கடலுள் மலையை மத்தாகவும், பிறையைத் தூணாகவும், நாகத்தைக் கயிறாகவும் கொண்டு தேவர்களும் அசுரர்களும் கடையும் நாளில் அமுதக்கலசத்தோடு தோன்றியவள். திருமாலின் திருமார்பில் உள்ள கௌத்துவமணியின் ஒளி பொறாது, பைந்துழாய்க் காட்டினுள் சார்ந்து விளையாடுபவள் திருமகள் எனத் திருமகளின் சிறப்புக் குறித்து விளக்குகின்றார்"

## நம்மாழ்வார்

நம்மாழ்வார் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராவார். திருவாய்மொழி என்னும் நூல்களைப் பாடியுள்ளார். இவர் இயற்றிய திருவாய்மொழியே 'திராவிடவேதம்' என்று புகழப்படுகிறது. இந்நூலாசிரியர் காப்புப் பருவத்திற்கு முன்னர் பழிச்சினர் பரவல் பகுதியில் நூலின் முதல் வெண்பாவில் சடகோபர் என்ற பெயரால் நம்மாழ்வாரைப்பற்றிக் குறிப்பிடுகின்றார். நம்மாழ்வாரைக் குறித்து,

"படியினில் மனிதர்கள் படுதுயர் அறஒரு
பதும வடிவதுகொளும் அதனாலும்
பயன்இலை எனமதி கொடு கனிமறுகுறு
பரிவிளொ டிணையுறும் அருளாலே

கடிமிகு பொழில்வளர் பொருநைநல் நதிபடி
கவின்மிகு குருகையுள் அடியார்தம்
கடுவினை ஒழிதர வந்சடம் வளிமுனி
கடவுள் தன் இணைமலர் அடிசேர்வாம்
........................................ 10

என்னும் பாடலில் திருமகள், மலைமகள், இந்திராணி, இவர்களாற் புகழப்பட்டவள் கலைமகள். இந்தக் கலை மகளைக் காக்க வேண்டி, உலகத்து துயர் நீங்கப் பத்து அவதாரங்கள் எடுத்தும் பயன் இல்லை என்று வருந்தி, அத்திருமாலே திருக்குருகூரில் சடம் என்னும் வளியை முனிந்த நம்மாழ்வாராக வந்தார். எனவே, நம்மாழ் வாரின் திருவடிகளை வணங்குவோம் என்று வேண்டு கிறார். திருமாலின் ஒரு வடிவமாகவே நம்மாழ்வாரைக் கருதினார் ஆசிரியர் என்பது இதனால் விளங்குகின்றது

## சூடிக்கொடுத்த நாச்சியார்

ஆண்டாள் பெரியாழ்வாரின் திருமகள் ஆவாள். நந்தவனத்தில் துளசிச் செடிகளுக்கிடையில் கிடைக்கப் பெற்றவள் என்பர். 'மானிடவர்'க்கென்று பேச்சுப்படில் வாழ்கில்லேன்' என்று வாழ்ந்த இவர். சூடிக்கொடுத்த நாச்சியாராய்த் திருமாலையே மணந்தார் என்பர்.

மண்மடந்தை திருமாலை நோக்கி உம்முடைய திருவுள்ளம் மகிழ்வது எதனால்? என்று கேட்க, அமுதத்தமிழாற் கவிசொல்லின் மகிழ்வேன் என்றார். அதற்காக நிலமகள் ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளாக அவதரித்துத் திருமாலுக்குப் பாமாலை சூட்டி மகிழ்ந்தனள் என்பது வரலாறு. கலைகட்கு உரியவள்

கலைமகள், நான்முகன் துணைவியான சரசுவதியின் திருவடிகளில் இக்கவிதை கூறும்படியாக என்பதை,

''நிலமாமகள் தனிநாயகர்
நெகிழ்மாமனம் மகிழ்வாகும்
நெறிஎதென அமுதாமென
நிலையார் முதுதமிழாலே
நலமார்தரு கவியே சொலின்
நயமாமெனும் அதுகேளா
நசை ஆர் புதுவையின் மேவுறு
நளிர்கோதையின் அடிசேர்வாம்
.........................''[11]

என்னும, பாடலில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாளின் திருவடிகளை வணங்குவோம் என்கிறார். இந்நூலில் ஆண்டாளை நிலமகளின் ஓர் அவதாரமாகக் குறித்துச் சிறப்பிக்கின்றார்.

## ஆழ்வார்கள்

வைணவச் சமய ஆழ்வார்கள் பன்னிருவர் குறித்து இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். பழிச்சினர் பரவல் இரண்டாம் பாடலில் ''திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் 'தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார்,குலசேகராழ்வார்,மதுரகவியாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், பெரியாழ்வார் இவர்களின் வைணவச் சமயத் தொண்டினைப் போற்றிக் கலைமகளின் மேல் எழுதப்படும் இத் தமிழ் நூல் சிறக்கும் வண்ணம் ஆழ்வார்களின் திருவடிகளை வணங்குவோம் என்கிறார்''[12]

**பூர்வாசிரியர்கள்**

பூர்வாசிரியர்கள் என்போர் இராமாநுசருக்கு முன் தோன்றிய நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், பெரியநம்பி ஆகியோர், இவர்களுள் நாதமுனிகள் என்பவர் முதல் ஆசாரியார் ஆவார். இவர் முதற்கொண்டு வைணவ ஆசாரியார்களின் பரம்பரை தொடர்கிறது. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தைத் தொகுத்தளித்த பெருமை இவரைச் சாரும்.

அறிவிற்கு மேலானவளும், குற்றமற்றவளும் ஆகிய கலைமகளின் திருவடிகளில் கூறும் இத்தமிழ் விளங்கும் பொருட்டு,

> **''நாலாயிரங்கவியும் மேனாள் விளங்கலுற**
> **நாடியருள் நாதமுனிகள்**
> **நல்உ(ய்)யக் கொண்டார் மணக்காலின் நம்பிஇசை**
> **நண்ணுவை ணவம் வளரவே**
> **மேலான நூலருறி வாலாய் மாய்இலகு**
> **வீறேறும் ஆளவந்தார்**
> **விண்டபுகழ் மிகுபெரிய நம்பி இவர் திருவடிகள்**
> **விரைமலர் அணிந்து பணிவாம்**
> **..............................''13**

என்ற பாடலில் நாலாயிரம் கவிதைகளையும் தொகுத்தளித்த நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார் பெரியநம்பி இவர்களின் திருவடிகளைப் பூக்கள் அணிந்து வணங்குவோம் என்கிறார்.

## இராமாநுசர்

நாதமுனிகள் வளர்த்த வைணவத்திற்கு ஒரு முழு வடிவம் கொடுத்து அதை நாடறியச் செய்த பெருமை இவரைச் சாரும். ஆசாரியார்களுள் இவர் தலைசிறந்தவராகக் கருதப்படுகிறார். மக்களின் துன்பம் கண்டு திருமாலின் நெஞ்சில் உண்டான வருத்தம் அறிந்து அது நீங்கும் வண்ணம் ஸ்ரீபெரும்புதூரில் அவதரித்தார் இராமாநுசர். கருணை வள்ளலான இராமாநுசரின் திருவடிகளை அடைந்து மகிழ்வேன் என்பதை,

"..............................
ஏரார் வளம் பெருகு பூதூரில் வந்தருள்
இராமாநு சன்; கருணையான்
ஈடேதும் இன்றிவளர் பாதாரவிந்தமலர்
யான்மேவி இன்புறுவனால்
..............................."[1]

என்னும் பாடலில் பாடுகின்றார்.

## வேதாந்த தேசிகர்

வேதாந்த தேசிகர் இராமாநுசர் வளர்த்த வைணவம் வடகலை தென்கலை என்று பெரும் பிரிவாகப் பிரிந்த போது, வடகலை வைணத்தின் தலைமை ஆசாரியராக விளங்கினார். இவர் வடமொழியில் மட்டுமின்றி தமிழ் மொழியிலும் பல வைணவ சமய நூல்களை இயற்றி உள்ளார். "வேதியர்-நிதியர் இவர்களின் உள்ளத்து வாழ்பவள் கலைமகள். நான்முகன் உயிர்போன்றவளும் அழகிய தோளணியினளும்ஆகிய சரசுவதியின் திருவடியில் என் பாடல் விளங்கும் வண்ணம் வேதத்துள்

விளங்கும் பெருமானை நீங்கள் உணர்ந்து வாழுங்கள் என்று கூறி வேதாந்த தேசிகன் திருவடிகளை நினைப் போம்''[15] என்று வேதாந்த் தேசிகர் பெருமையினைக் குறிப்பிடுகிறார்.

### பிள்ளை உலகாசிரியர்

பிள்ளை உலகாசிரியர் தென்கலை வைணவத்தின் தலைமை ஆசாரியார். இவர் பல வைணவ த்த்துவ நூல்களை இயற்றி சமயத்தொண்டு ஆற்றியுள்ளார். ''சரசுவதியின் திருவடிகளில் இந்நூல் சிறந்து விளங்கும் படி சிந்தை, செவி, வாய், இவைகட்கு இனிமைதரும் 'அஷ்டாத்ரகசியம்' என்னும் நூலை அருளிய பிள்ளை உலகாசிரியர், திவ்விய பிரபந்தம் முழுமைக்கும்பேருரை அருளிய பெரியவச்சான் பிள்ளை மணவாள மாமுனிகள் என்னும்இப்பெரியோர்களுடைய திருவடிகளை வணங்குவோம்''[16] என்கிறார்.

### கம்பநாடர்

கம்பன் இராமாயணம் என்னும் காப்பியத்தை இயற்றியதால் மக்கள் அவர் பெருமையினை ஏற்றி அவர் பெயரோடு கம்பராமாயணம் என்று வழங்கினா. இவா சடகோபரந்தாதி, சரசுவதியந்தாதி, இலக்குமி யந்தாதி, ஏரெழுபது முதலிய நூல்களை இயற்றி யுள்ளார். இவர் மகன் அம்பிகாபதியும் அம்பிகாபதிக கோவை என்னும் நூலை இயற்றியதாகக் கூறுவர்.

கம்பனின் சிறப்பு குறித்து இந்நூலில் பழிச்சினர் பரவல் என்னும் பகுதியில் கூறுகிறார். கம்பனை

அறியாத மக்கள் யாவரும் உலகம் அறியாதவர்கள் என்று கூறுமாறு தமிழில் இராமாயணத்தைப் படைத்தவன் மன்னவர்களா ஆயினும் தன்னுடைய சொற்கேட்டு நடக்கும்படி வாழ்ந்தவன் என்பதை,

''தன்னை அறியாதவர்கள் தம்மை அறியாதவர்கள்
தாம்எனச் சாற்ற வளர்வோன்
சாயாத வண்தமிழ் இராமாயணம் தந்த
தாவா விழிப்புகழினோன்
மன்னவர்கள் எண்ணிலும் தன்னடியின் மன்னவே
மன்னுபெரு வாழ்க்கை யாளன்
................................''[17]

என்னும் பாடலில் அன்னை போல் அருளும் கலைமாமகள் திருவடியில் இந்தக் கவி தழைக்கும் வண்ணம் கம்பனின் திருவடிகளை வணங்குவோம் என்பார்.

## அம்பிகாபதி வரலாறு

கம்பனின் மகன் அம்பிகாபதி சோழ அரசனின் மகளைக் காதலித்தான். இதனை உணர்ந்த அரசன் விதித்த நிபந்தனையின் படி அம்பிகாபதி முதல் இரண்டு அடிகளைப் பாடவும், பின் இரண்டடியினைச சூழ் நிலைக்கேற்ப முற்றுவித்தார் கம்பர் என்பது வரலாறு. அப்போது கலைமகள் கிழவி வடிவம் கொண்டு அரசனுக்குக் காட்சி தந்து அரசனை மனம் திருந்த வைத்தாள் என்ற செய்தியை,

''................................
ஒரு கிழ வடிவம் கொண்டு
டுற்ற சன்தனை உதயம் விலக்கிய
உத்தம நாமகளே!
................................''[18]

எனவும் இலங்கையுள் சூரியன் செல்லாது இருந்ததைச் செல்லும்படி செய்தது இராமாயணம், இத்தகைய இராமாயணத்தை இயற்றிய கம்பனின் மீது ஆர்வம் உடையவள் கலைமகள்[19] கம்பனின் சரசுவதி அந்தாதி என்னும் நூலைப் பாமாலையாகக் கொண்டவள் கலைமகள்[20] கம்பன் கலைமகளின் மூலம் அடைந்த நன்மைகள் கூறினால், கலைமகளின் பெருமையினை இவ்வளவு என்று வரையறுத்துக் கூறமுடியாது.[21] என்று கலைமகளின் மேன்மைகளையும் சிறப்பினையும் கூறுகின்றார்.

கம்பனின் மேல் நூலாசிரியர் கொண்டிருந்த பற்றின் காரணமாகவே இந்நூலில் செங்கீரைப் பருவத்திலும் நீராடற் பருவத்திலும் உள்ள பாடல்களின் முடிவில் கம்பனின் சரசுவதி அந்தாதி நூலை மகிழ்வோடு ஏற்றுக்கொண்ட தேவியே! நீ செங்கீரையாடியருள்க, வெள்ள நீராடியருள்க என்று பாடுகின்றார். மேலும் இந்நூலாசிரியருக்குக் கலைமகள் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூலை இயற்ற, கம்பரின் சரசுவதியந்தாதி தூண்டுதலாக அமைந்தது.

### சிவபெருமான்

சிவபெருமான் சைவ சமயத்தினர் வழிபடும் கடவுள் இவரது தொழில் உலக உயிரினங்களை அழித்தல் என்பர். பெரியோர்களின் தூயநெஞ்சிலும், வெண்தாமரை மலரிலும், நான்முகன் நாவில் மகிழ்வோடு வாழும் கலைமகளைக் காக்க வேண்டி,

''செக்கச் சிவந்த திருமேனி
மென்மையாகத் திருநீறு
சிறக்கப் பூசி வெள்விடையில்
திகழ்ந்து வெண்மா மலையமர்ந்து

'நக்கப் பெயரான் உலகேத்த
நல்லோர் களிக்கும் ஞானம் அருள்
நாதன் குழைசேர்காதன் இரு
களின மலர்ச் சேவடி துதிப்பாம்''
................................[22]

என்னும் பாடலில் சிவபெருமான் சிவந்த திருமேனி முழுவதும் வெண்ணிறமாகத் திருநீறணிந்தவன் இடப வாகனத்தேறிக் கையிலாயத்தில் அமர்ந்து இருப்பவன் இவன் நாக்கன் என்று சிவபெருமானை உலகம் சொல்லவும், நல்லவர்கள் விரும்பும் ஞானத்தைத் தரும் சிவபெருமான் திருவடி மலர்களை வணங்குவோம் என்று காப்புப் பருவத்தில் பாடுகின்றார்.

### பார்வதி

மலையரசன் மகள் பார்வதி. சிவனின் துணைவியா வாள். இவளைச் சக்தியின் வடிவமாகச் சைவ சமயத்தினர் வழிபடுவர். சிவனின் இடப்பக்கத்தில் அமர்ந்து கொண்டு ஆட்சி பெற்ற ஆற்றலுடையவள். இணையில்லாத புகழ் உடையவள். திருமாலுடன் பிறந்தவள். முருகன், விநாயகன் ஆகிய இருவருக்கு அன்னையானவளான பார்வதி தேவியைப் பாட்டுடைத் தலைவியாகிய கலைமகளைக் காக்கும் வண்ணம் துதிப்போம் என்று காப்புப்பருவத்தில் பரடுகின்றார்.[23]

### முருகப்பிரான்

சிவபெருமான் பார்வதி தேவியின் மைந்தன் முருகனை வழிபடுவோர் கௌமாரம்என்னும் சமயத்தினர் முற்றும் உணரும் ஞானம் படைத்தவளும், குணங் களால் தாயை ஒத்து இருப்பவளும், அன்பர்களை

வாழவைப்பவளும் ஆகிய கலைமகளைக் காக்க வேண்டி,

"படிஏழும் வைத்த அடியே வழுத்து
பரவோர் வன்தீதுள் மிகுந்தார்த்திகூர்
......................................"[24]

என்னும் பாடலில் இந்த ஏழு உலகங்களையும் சுற்றி வந்தவனின் திருவடி களைத் துதிப்போர்க்கு நன்மையை விளைவிப்பவன். திருமாலின் மருமகன் வெட்சி என்னும் மாலையை அணிந்தவன். உமையம்மையின் திருமகனாகிய முருகப்பிரனின் திருவடிகளைத்துதிப்போம் என்று காப்புப் பருவத்தில் பாடுகிறார்.

## இந்திரன்

இந்திரன் தேவலோகத்து அரசன். திருவடித் தாமரை சிவப்பேற உலகளந்த திருமாலை ஒத்த கற்பக நிழலில் இருக்கும் இந்திரன், கலைமகளைக காக்குமாறு அவரின் திருவடி மலர் நினைப்போம் என்று காப்புப் பருவத்தில் இந்திரனை வழிபடுகின்றார்."[25] கற்பக நிழலில் வாழும் வலிமையான வச்சிரப்படை உடையவன் இந்திரன். இத்தன்மை பெற்ற இந்திரனின் அறிவுக்கேற்ற கல்வி வடிவானவள் கலைமகள் என்று சிறப்பித்துக் கூறுகின்றார்.

## பிரம்மதேவன்

கலைமகளின் துணைவன் பிரம்மன். இவர் உலக உயிரினங்களைப் படைத்தல் தொழிலை மேற்கொண்டுள்ளதாகக் கூறுவர். திருமகளும், மலைமகளும் நீங்காமல் உடன் இருந்து வேதமொழிகளில் போற்றும்

கலைமகள், முத்தினைப் போன்ற வெண்மைநிறம் உடைய வெண்தாமரை மலரில்வாழும் பிரம்மதேவனைக் குறித்து,

> "......................................
>
> **தன்னிகரில் வாதியரை வென்றுநான் முகம்மருவு**
> **தன்மையான் நன்மை மிக்க**
> **தாமரை மலர்ப்பாதம் மாமகிழ்வின் என்மனத்**
> **தாமரை இருத்து வேனால்**
>
> ......................................"[27]

என்னும் பாடலில் பொன்நிறம் கொண்டு, செந்தாமரையில் இருந்து அன்னம் ஏறி, உலகு யாவையும் படைத்து வேதியன் என விளங்கினன் பிரம்மன். தன்னுடைய நாவன்மையால் தன்னை எதிர்த்தவர்களை வென்றவன். நான்முகத்தோடு விளங்கும் பிரம்மனின் திருவடிகளை வணங்குவேன் என்கிறார்.

ஆயுதங்கள் என்பது பகைவர்களின் உடலுக்குள் புகும், இரத்தத்தில் மூழ்கும், கொல்லன் உலையில் நெருப்பில் வைத்துச் சீர் செய்யப்படும். பகைவரைக் கொல்லுதற்குரிய கூர்மையும், ஒளியுமுடையதாகக் காணப்படும். இப்படிப்பட்ட தன்மை வாய்ந்த ஆயுதங்கள் எதுவும் இன்றி, துணையாகத் தரைப்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை எவையும் இன்றி, தாமரை மலர்மேல் இருந்து தன்னை எதிர்த்தவர்களைத்தன் சொற்திறத்தால் அழிப்பவன் பிரம்மன். எனவே, பிரம்மனுக்குச் சொல்லே ஆயுதமாக உள்ளது[28] என்று முத்தப்பருவத்தில் பிரம்மனின் சிறப்பினைக் குறித்துள்ளார்.

பிரம்மதேவனின் இயல்பு குறித்து உலகில் உள்ள யாவருக்கும் அவரவர் செய்த வினைக்கு ஏற்ப வாழ்க்கை நியதிகளைத் தலையில் எழுதுபவன் பிரம்மன். திருமாலின் உந்தியாகிய வயிற்றில் இருந்து வந்தவன். பொன்னிறம் உடையவன்; வேதங்கள் யாவும் அறிந்தவன்; வாக்கையே ஆயுதமாகவும், அன்னத்தை வாகனமாகவும் கொண்டவன். கலைமகளைப் பிரம்மன் தன்னுடைய உயிருக்கு இணையாக நேசிக்கின்றான் என்பதை,

> **''நின்னை உயிருக்கினிய தேவிஎன மேவினோன்**
> **நெடியமால் உந்தி வந்தோன்**
> **நீடுலகின் அவரவர் வினைக்குத் தகத்தலையின்**
> **நெட்டெழுத் தெழுதி விடுவோன்**
> **..................................''**[29]

என்று பாடுவர். இந்நூலாசிரியர் தன்னைக் குறித்துக் கூறும் போது இந்தப் பூமிக்குச் சுமையாக என்னைப் படைத்தவன் பிரம்மன். இத்தன்மைவாய்ந்த பிரம்ம தேவனுக்கு இணையான தங்கத்தால் செய்த அம்மாணையில் நீ ஆடியருள்க என்று கலைமகளை வேண்டுகிறார்.

## கன்னியர் எழுவர்

கன்னியர் எழுவரான மகேசுவரி, வராகி, கௌமாரி, வைணவி, அபிராமி, இந்திராணி, துர்க்கை இவர்களைக் காப்புப் பருவத்தில் பாடுவது மரபு. மேலும் இவர்களைக் குறித்துப் பாடும் பொழுது அவர்களின் கொலைத் தொழில் கொடுமைகள் அகற்றிப்பாடப்பட வேண்டும். இந்நூலில் ஆசிரியர் மேற்குறித்த மரபு பின்

பற்றியே கன்னியர் எழுவர் குறித்துக் கலைமகளைக் காக்கும் வண்ணம் பாடியுள்ளார்.[30]

## முப்பத்து முக்கோடி தேவர்

தினத்தை உண்டாக்கும் இரவியர் பன்னிரண்டு பேரும், இடபமீதுறும் உருத்திரர் பதினொரு பேரும், நோய்களை நீக்கும் மருத்துவர்கள் இரண்டுபேரும், வசுக்கள் எட்டுப்பேரும் ஆகியகாவலர் முப்பத்து முக்கோடி தேவர்களை, கலைமகளைக் காக்கும் வண்ணம் காப்புப் பருவத்தில் வேண்டுகிறார்.[31]

## குமரகுருபரர்

குமரகுருபரர் பற்றிய செய்திகளை இந்நூலில் பொன் ஊசற்பருவத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. பாண்டி நாட்டில் திருவைகுண்டம் என்னும் ஊரில் ஊமைச் சிறுவனாகத் தோன்றினார். பின்னர் திருச்செந்தூர் முருகனால் பேசும் திறன் பெற்றார். குமரகுருபரர் காசிக்குச் சென்ற பொழுது அங்கு தங்குவதற்கு மடத்தை நிறுவ எண்ணினார். எனவே, அந்நாட்டின் அரசனுடைய மொழியை அறிந்து கொள்வதற்காகக் கலைமகளை வேண்டி 'சகலகலா வல்லி மாலை' என்னும் நூலைப் பாடினார்.

இதனை,

"..............................

**மேன்மை பெறு காசிநகர் சென்றபொழுதாங்கே**
**விளங்கரசன் மொழிதேரவே**

பழங்கர் சுவைச்சகல கலைவல்லி மாலையது
பாடி அயல் மொழி தேர்ந்தனன்
...............................''32

என்று பாடியுள்ளார் ஆசிரியர்.

கலைமகளின் அருளால் பின்னர் குமரகுருபரர் அம்மன்னனின் மொழியாகிய 'இந்துஸ்தானியை' அறிந்து மன்னனின் உதவியால் காசியில் மடம் அமைத்தார். என்றசெய்தியை இங்குக் குறிப்பிட்டுள்ளார். குமர குருபரரின் சகலகலாவல்லி மாலை என்னும் நூலும் கலைமகள் பிள்ளைத்தமிழ் நூல் எழுத ஆசிரியருக்குத் தூண்டுதலாக அமைந்தது.

திருமால் முதற்கொண்டு வைணவ சமய ஆழ்வார்கள் ஆசார்யார்கள், சைவசமயத் தெய்வங்களான சிவன் முதலியோரையும், இந்திரன், பிரம்மன் போன்ற தெய்வங்களையும் இந்நூலில் குறிப்பிட்டுள்ளது. சமயச் சிறப்பினை மக்கள் உணர்ந்து கொள்வதற்காக எனலாம். மேலும் மேற் குறித்த தெய்வங்களுக்கு இணையானவள் கலைமகள் என்று கூறவும்,கலைமகளின் சிறப்பினையும் வைணவ சமயத்தைப் பற்றிப் பிறர் உணரவும் ஆசிரியர் நூலில் கூறுகின்றார். கம்பன், குமரகுருபரர் முதலிய புலவர்கள் கலைமகளின் அருளால் இலக்கியங்களைப் படைத்துப் புகழுடன் வாழ்ந்தனர் என்று கலைமகளின் அருளைக் குறித்துள்ளார்.

**கலைமகள்**

இந்நூலின் பாட்டுடைத்தலைவி கலைமகள். எனவே கலைமகளின் வடிவம், சிறப்பு, அருள் குறித்து அதிக மான பாடல்களில் கூறப்பட்டுள்ளன. தமிழகத்தில் சரசுவதிக்கு என்று அரிலாற்றின் தென்கரையில் திகழும் கூத்தனூரில் தனியே அமைந்த கோயில் இஃதொன்றே என்பது குறிப்பிடத்தக்கது. பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்திலிருந்து மூன்று கல் தொலைவில் திருவீழிமிழலையருகே உள்ளது.

**கலைமகள் வடிவம்**

கலைமகள் வெண்மை நிறம் உடையவள், எத்தகைய வெண்மைநிறம் என்பதற்குப்பால், பாற் கடல், பணி, மதி, சிவபெருமான் இருக்கும் கயிலை மலை, அமுது, பளிங்கு, பெடை அன்னம், நீர் இல்லாத மேகம், புகழ், நல்லோர் உள்ளம் இவை போன்ற வெண்மைநிறம் உடையவள் என்பதை,

> **''பாலும் பால் ஆர் தருகடலும்**
> **பணியும் பனிவெண் மாமதியம்**
> **பாகம் ஒருபெண் குடியிருக்கும்**
> **பரமன் உறையும் பருப்பதமும்**
> **..............................''(33)**

என்று கலைமகளின் வடிவச்சிறப்பினை ஒப்பிட்டுக் கூறுகிறார். முல்லை மலர் அணிந்த கூந்தலும், செம்பவளவாய் மலரையும், யாழில் இசை மீட்டும் கைம்மலரையும் கொண்டு விளங்கும், வெண்ணிறப் பெண் கலைமகள் என்பதை,

"..............................

மவ்வல் மலர்க்குழல் செம்பவளத்திரு
வாய்மலர் யாழின் இசை
மன்னுற மீட்டிய கைம்மலர் கொண்டு
வயங்கிய வெண்மகளே!
.............................."[34]

என்னும் பாடலில் வெள்ளைக் கமலாசனம் போன்ற வெண்தாமரையில் இருப்பவள் என்று கூறுகிறார்.

கலைமகளின் கண்கள், மீன், மான், குவளை, வேல், இவை போன்றமைந்து அருள்மிக்க கடைக்கண் செலுத்தி அடியாரைக் காக்கும்,

"..............................

மீன்என நட்புறு மாட்என உற்பல
மெய்ப்பூ வைப்போல்
வேல்என உற்றருள் மேவும் விழிக்கடை
யுய்த்தாள் பொற்சோதி!
.............................."[35]

என்று சப்பாணிப் பருவத்தில் குறிப்பிடுகின்றார், கலைமகள் அழகினைக் குறித்துச் சந்த்ரோதயம் போன்று விளங்கும் அந்த அழகினை

"..............................

இலங்குசந்த் ரோதயம் எனத் திகழும் இன்னழகை
எளியேன் உரை உரைப் பெண்கொலோ?
.............................."[36]

என்னும் பாடலில் கலைமகள் அழகினைச் சந்த்ரோதயம் விடச்சிறந்து விளங்குவதாகக் கூறுகிறார்.

கலைமகள் கூந்தல் முகில் போன்ற குழற்கற்றை யாக அசையவும் இருள் விலகும் வண்ணம் விளங்கும் மதிமுகம் செந்தாமரை மலர் ஒத்த இருபாதங்களிலும் விளங்கும் சிலம்புகள் ஒலி செய்ய, இடையில் உள்ள மேகலை கலின், கலின் என்று முழக்கம் செய்ய, களிற்றின்மருப்பு(ஒத்த கொங்கைகளை)ஏந்தி அதனால் ஒடியும் என இடைதளர்ந்து வளையும். வெண்ணிறம் பெற்ற இணைக்கை வளைகள் ஆர்ப்பவும், காதில் அணிந்துள்ள மகர குண்டலங்கள் ஒளிவீசுகின்றன.

"...............................
எங்நிறத் தினும் உயரும் வெண்ணிறம் கெழுமுகின்
இணைக்கையின் வளைகள் ஆர்ப்ப
ணை மகர குண்டலம் வில் வீசமிசை வருமுகல்
எனுங்குழற் கற்றை யசைய
அல்நிறம் பெயருமதி முகம் வெயர் தரச்சிறிய
அடியன்மகி ழற வருகவே!
..............................."37

என்னும் பாடலின் மூலம் கலைமகளின் வடிவ அழகினை அறியலாம். மயில் போன்ற அழகும், நூல் போன்ற சிறிய இடையும் உடையவள்; அன்பர்களின் அச்சம் போக்கும் அருள் மிகுந்த செவ்வரி கருவரி உடைய விழிகள் படைத்தவள் கலைமகள் என்பதை,

"அருகிருக்கும் மயிலை ஒத்த
அழகும் இயலும் உடையவள்
அணியிழைக்கு நிகர் எனச்சொல்
அரியசிறிய இடையவள்
வெருவழித்த அருள் மிகுத்து
விரியும் வரிய விழியினள்!
..............................."38

என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

### கலைமகளும் வெண்மையும்

கலைமகள் இருக்கும் ஆசனம் வெண்ணிறத் தாமரை மலர், அவளின் அன்னவாகனம், ஆடை, குணமாகிய சத்துவம், திருவடிகள் வாழ்த்தும் உள்ளம் அவள் புகழ் அனைத்தும் வெண்மைநிறம் என்பதை.

''வெள்இதழ்த் தாமரைப் பூங்கோயில் ஆதனம்
வெள்ளெனும் மராளம் ஊர்தி
வெண்ணிறம் திருமேனி வெண்ணிறம்படும் அணிகள்
மேவும் அம்துகிலும் வெண்மை
.............................................''(39)

எனவே, ஒளிமிக்க வெண்முத்தினால் செய்த இந்த அம்மானைக் கொண்டு ஆடுக என்கிறார்.

### தமிழும் கலைமகளும்

கல்விக்கு முதல்வியாகிய கலைமகளுக்குத் தமிழ் மொழியில் உள்ள இலக்கியங்களை ஒப்பிட்டுக் குறிப் பிடுகின்றார். இதனை,

ஈரடி ச்னும்திருக் குறளோ டிளங்கோ
இயற்றுறு சிலம்பணிந்தே
இலங்குநன் னூலெனும் சிற்றிடை ஒசிந்தலற
எழில் செய்மணி மேகலை உறப்
பேருறு கலித்தொகையின் இன்பமார் மார்பிற்
பிறங்குசிந் தாமணி மினப்
பேருலகு வந்தோது கம்பராமாயணப்
பெருநூல் இலங்கு முடியாச்

சீருற விளங்கும் நீ திருவாயின் மொழியினால்
தீயபிணி பசி பகை முதல்
சேரா தொழித்தருளும் ஒருதிருப் பாவையே!
செறிபத்தி சாரார் போற்றப்
—...............................'''0

என்னும் பாடலில், திருக்குறள் இரண்டு அடிகள் உடையது அதனால் திருக்குறள் உன்னுடைய இரண்டு திருவடிகளுக்கும், பெண்களின் கால்களில் சிலம் பணிவது இயற்கை. எனவே, இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம் சிலம்பாகவும்; நன்னூல் என்பது ஒரு இலக்கண நூல், நல்நூல் ஒத்த சிற்றிடைக்கும். பெண்களின் இடையில் மேகலை போன்று மணிமேகலையும், கலித்தொகை சங்கநூல்கள் முதலியன மார்பகமாகவும், அம்மார்பில் அரங்களாகச் சிந்தாமணியும், திருமுடியாகக் கம்பராமயணமும் ஒத்து இருக்கின்றன. இவை அனைத்தும் உன்னுடைய அருளாலே அருளப்பட்டன. எனவே அருள் வாய்ந்த உன்னுடைய மொழியாலே பசி, பிணி,பகை முதலியவை இல்லாது நீக்கியருளும் ஒப்பற்ற திருப்பாவை போன்றவள் 'கலைமகள் என்று கூறுகிறார். இந்நூலில் கலைமகளின்வடிவ அழகினை ஆசிரியர் சிறப்பித்துள்ள செய்தியில் இருந்து கலைமகளின் அழகினை நாம் உணரமுடிகிறது.

## ஆடல்

கோடி சூரியர்களுக்கு இணையான கலைமகளின் சிலம்பு ஒலி செய்து ஆடவும் இடையில் இருக்கும் மேகலை ஆடவும், மேகலை ஆட அதனால் இடை வருந்தி ஆடவும், அணிந்துள்ள மணமிக்க மலர்மாலை ஆடவும், மோகனப் புன்னகையாட, திருமேனியில்

வியர்வை என்னும் முத்தம் ஆடவும், காதணிகள் ஆடவும், உன்னுடைய அடியார்தம் உள்ளம் குழைந்தாடவும், அருள்விழிகள், மறைகள் ஆடவும், விளையாடி வருகின்ற சோதிமயமான தெய்வமே கலைமகள்.

**''ஒருகோடி சூரியர் உதித்தனைய நின்பதத்**
**துறு சிலம்பொலிசெய் தாட**
**ஒன்றிஒளிர் மேகலை கலின் கலின் என்றாட**
**ஒசியும் இடை மறுகியாட**
**..................................''41**

என்று கலைமகளின் ஆடல் குறித்துக் கூறுகின்றார்.

## மூன்று தொழில்கள்

மழுவாயுதம், வெண்சங்கு, மலர் ஆகிய இவை களைக் கொண்ட சிவபெருமானின் தொழில் அழித்தல், திருமால் காத்தற் கடவுள், எனவே உலகத்தில் உள்ள உயிரினங்களைக் காக்கும் தொழில் செய்பவர் திருமால். உலக உயிரினங்களைப் படைக்கும் தொழில் பிரம்மன். இவர்களின் மூன்று தொழில்கள். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகும். இதனை,

**''..................................**
**வடிவாரும் மழுவெள்ளை வளைவாச மலர்கொள்ளும்**
**வான்கடவு ளர்க்குறு தொழில்**
**வகுத்துச் சிறப்புற நடத்தித் திருத்தக**
**வளர்ந்தோங்கு கலைமங்கையே!**
**..................................''(42)**

என்னும் பாடலில் சிவனின் அழித்தல், திருமாலின் காத்தல், பிரம்மனின் படைத்தல் இவர்களுக்குரிய

மூன்று தொழில்களையும் நடத்தித்தருகின்ற கலை மங்கை கலைமகள் என்று சிறப்பிக்கின்றார்.

## இலக்கியங்கள்

அறுபத்து நான்கு கலைகள், இதிகாசங்களான இராமாயணம், மகாபாரதம், புராணங்கள்,கிளைக்கதை களான உபாக்கியாணங்கள், உபநிடதங்கள், பாயிரங் களோடு ஆயிரம் மறைகள் மற்றும் என்றும் பிறப் பில்லாத சிறப்பு வாய்ந்த அனைத்து நூல்களையும் வெளியிட்டருளிய பெண்தெய்வம் கலைமகள் என்பதை,

> ''..............................
> **தூய்மை மிகும் இதிகாசம் மாண்புறு புராணங்கள்**
> **துகளறு கிளைக் கதைகளாச்**
> **சொலப்படும் அனைத்துவிதம் உற்ற பெருநூல்களும்**
> **சொல்லும் ஒருபெண் தெய்வமே!**
> ..............................''(43)

என்ற பாடலில் கலைகள் முதற்கொண்டு இதிகாசங்கள் வரை தோற்றுவித்தவள் கலைமகள் என்கிறார்.

## பெருந்தவம்

திருமகள், மலைமகள், உன்மேல் கொண்டிருக்கும் அன்பால்காண வந்துள்ளனர். வள்ளிநாயகி,இந்திராணி யும் வந்துள்ளனர். கலைமகளே உன்னைக் காண்பதே எங்கள் பெருந்தவம் என்று மகிழ்ந்து கொண்டாடும் வகையில், இவர்களின் நெஞ்சம் களிப்புறவும் நீ வரவேண்டும்,

"............................
இன்றிவர் நெஞ்சம் அருங்களி கொண்டிவண்
இன்றே அன்பாக
எந்தவம் எந்தவம் என்று சிறந்து
மகிழ்ந்தே கொண்டாடத்
.........................................." (44)

என்று கூறுகின்றார்.

## தஞ்சம்

தஞ்சம் என்று பாதுகாப்புத் தேடி வரும் அடியவர்களுக்கு, அன்புடன் அவர்களை வரவேற்று அவர்களின் சந்தேகத்தைப் போக்கி மகிழ்க என்று அருள் வழங்கும் தேவி கலைமகள்,

"..........................
தஞ்சம் எனும் சொல் நினைந்துரை தந்தவர்
தம்பால் அன்பாகி
.........................." (45)

அன்பும் பண்பும் உருவாக இருப்பவள், பிரம்மன் மனம் மகிழ்ச்சி அடைய அவனுடன் இருப்பவள் என்று கலைமகளின் சிறப்பினைக் கூறுகின்றார்.

## இன்பம்

சிறந்த அறிஞர்களிடம் பயிலும் இன்பம், நூல்களைப் படிக்கும் தோறும் உண்டாகும் இன்பம், தன்னுடைய சுயமுயற்சியால் கிடைக்கும் செல்வத்தால் உண்டாகும் இன்பம், அறிஞர்களிடம் ஏற்படும் மகிழ்ச்சி இவை யாவும் உன்னுடைய திருவடிகளை

அன்புடன் உள்ளத்தில் கொண்டால் ஏற்படும் இன்பத் திற்கு இணையாகும். எனவே, கலைமகளின் திருவடி களை எப்போதும் உள்ளத்தில் நினைவு கொள்ளுதல் இன்பமானது ஆகும் என்று கலைமகளால் கிடைக்கும் இன்பத்தை ஆசிரியர் கூறுவர்.[46]

**கல்வி**

கல்வி அறிவு இல்லாதவர்களின் நெஞ்சம் வருந்து கின்றது. கற்றோர் தம் நெஞ்சம் இன்பமாக இருக் கின்றது. நாம் மதிக்கும் செல்வம் நிலையானதும் அன்று. செல்வத்துள் சிறந்த செல்வம் கல்விச் செல்வம் தான் அத்தகைய கல்விச் செல்வத்தை அருள்பவள் கலைமகள் என்பதை,

> **''கல்வி அறிவில்லாத புல்லருடைய நெஞ்சம்**
> **கலங்கித் தளர்ந்து கொட்டக்**
> **கற்றவர் மனத்தொளிரும் அற்புதம் எனத்தகைய**
> **களிஓகை நின்று கொட்டச்**
> **செல்வமது செல்வமோ? கல்வியே செல்வச்**
> **சிறப்பென மகிழ்ச்சி கொட்டத்**
> **.........................................'' (47)**

என்னும் பாடலில் கல்வியின் சிறப்பினை உணர்த்து கிறார்.

**கலைமகளின் அறிவுத்திறன்**

தாமரையில் வாழும் நான்முகன், அடியவர்களின் துன்பம் அகலப் பத்து அவதாரம் எடுத்து ஞானம் வழங்கிய திருமால், வேற்படை கொண்ட முருகப்பிரான், கற்பக நிழலில் வாழும் இந்திரன், பிறை முடித்த

சிவபெருமான் ஆகிய இவர்களின் அறிவுக்கேற்ற கல்வி வடிவானவள் கலைமகள். (48)

### ஐம்பூதங்கள்

நீர், நிலம், காற்று, நெருப்பு, வானம் ஆகியன ஐம்பூதங்கள் சூரியன், சந்திரன் இவை தம்முடைய தொழிலைச் செய்யுமாறு இயக்குபவள் கலைமகள். எனவே கலைமகளுக்கு நிகரானவர்கள் இல்லை என்கிறார். (49)

### அறிவின் சிறப்பு

சிறந்த அறிவுள்ளவர்களாக இருப்பின் அரசன் தன்னுடைய அவையில் முன்னணியில் வைப்பான். ஆனால் அறிவில்லாதவர்களாக இருப்பின்பெற்றதாயும் வெறுத்து நீக்குவாள் இது உலக இயல்பு. இத்தகைய சிறப்புக்குரிய அறிவிற்கு முதல் தெய்வம் கலைமகள் என்பதை,

**''அறிவுடை மக்களை அரசும் உவப்பின்**
**அவைக்கணின் வைப்பானால்**
**அறிவறும் மக்களை அனையும் வெறுப்பின்**
**அகற்றிட நிற்பாளால்**
'' ........ ..... ............ .. (50)

என்று கூறுவர். அறிவு தோன்றும்வண்ணம் ஒளி மிகுந்த நின் மலரடியைப் போற்றும் முறை அறியாதேன். ஆயினும் நினைவில்லாத எனக்கும் நீ அருளை வழங்குக என்று ஆசிரியர் கலைமகளை வேண்டு கின்றார்.

## இசையில் வல்வள்

இசையில் வல்லவர்கள் தும்புருவம், நாரதரும், ஆவர். இவர்கள் கலைமகளின் இசை கேட்டு மயங்கி நிற்கின்றனர். பசுக்களின் பின் குழலூதும் கண்ணன் மெய்மறந்து நிற்கின்றான். புலியும், சிங்கமும் தன்னுடைய தொழில் மறந்து நிற்கின்றன. உலகம் யாவும் இன்பத்தில் இருக்க இசைமீட்டு வளங்கும் கலைமகள்,

**''இசையினால் பெயர் பெற்ற தும்புருவும் நாரதனும்**
**யாழ்விடுத் துருகி நிற்ப**
**இருந்தா நிரைப்பின்னர் வேயூதும் எம்பிரான்**
**இதயம் கனிந்த நிற்பத்**
**............ .... ...... ....... (51)**

என்னும் பாடலில் கலைமகள் இசையில் வல்லவள் என்றும் விளக்குகின்றார்.

## முத்தங்களின் இயல்பு

கடல் முத்தம் உவர்ப்பாகும். தாமரை மலரின் முத்தம் நீர்த்து விடும். யானை மருப்பின் முத்தம் உறுத்தும். மகளிர் கழுத்தில் வந்த முத்தம் இழுக்குறும், மேகத்தின் முத்தம் குளிர்படும். மற்றைய முத்தங்கள் கடைப்படும். எனவே

**''...................................**
**விளம்பும் மற்றை முத்தமெலாம்**
**மெலிந்து மிகவும் கடைப்படுமே!**
**கலைஆர் அமுதே! அவை எல்லாம்**
**கருதேம் முத்தம் தருகவே!**
**—..................''(52)**

இத்தகைய முத்தங்களை நாங்கள் விரும்பவில்லை. கலைமகளே உன்னுடைய கனிவாயின்முத்தம்அருள்க. முத்தங்களின் இயல்புகளைக் கூறி இவற்றைவிட கலைமகளின் முத்தமே சிறந்தது என்று முத்தப்பருவத்தில் கூறுகின்றார்.

### கலைமகளும் அம்புலியும்

சந்திரன் இரவில் மட்டும் வருபவன் சந்திரனைக் கண்டால் தாமரை இதழ்கள் குவியும். சந்திரன் மான் போன்று களங்கம் பெற்று வருகின்றான்; நீல ஆடை பேரன்று இருக்கின்றான்; ஆனால் கலைமகள் இரவு பகல் எப்பொழுதும் காட்சி தருபவள். கலைமகளைக் கண்டால் தாமரை மலர்களின் இதழ்கள் விரியும். மகளிரின் களங்கம் போக்கி வருபவள்; வெண் துகில் பெற்று வருபவள். எனவே, உன்னை விட கலைமகள் சிறந்து விளங்குகின்றாள். ஆதலின் நீ கலைமகளுடன் ஆட வருக! என்று சந்திரனை அழைக்கின்றார் ஆசிரியர்.'' (35)

### அன்னமும் அம்புலியும்

அம்புலி உன்னை எத்தனை முறை அழைத்தாலும் நீ வராமல் போகின்றாய். இங்கு வராமற் போனால் பின்னர் நமக்கு என்ன தீமைவிளையும் என்று உணரும் அறிவும் உனக்கு இல்லை. உத்தமியாகிய கலைமகள் அழைக்கவும் நீ உணராமல் ஓடினால் அன்னம் இவளின் வாகனம் அது உண்ணுகின்ற பால் சோற்றுக்கவளம் என்று உன்னை விழுங்கிவிடும். எனவே, நீ விரைந்து கலைமகளிடம் ஆட வருவாயாக என்று அழைக்கின்றார்.[45]

## கலைமகள் சினம்

அம்புலி இன்னமும் வரவில்லை என்று கலைமகள் சினத்தோடு கூறினாள், இதனையறிந்து நான் இவன் முன்பின்அறியாத இளங்குழவி. எனவே சினம் கொள்ள வேண்டாம். அவன் உன்னுடைய பின்னிய கூந்தலை அரவம் என்று அஞ்சி வரவில்லை என அம்மையி சினத்தைக் குறைத்துள்ளோம். நீ, நிலைத்திருக் விரும்பினால் இப்பொழுதே இவளிடம் வருக! என்று அம்புலியை அழைக்கிறார்.[55]

## முக்தி அளிப்பவள்

'மூன்று உலகங்களையும் படைத்து,காத்து அழித்து முன் போல அவற்றை உண்டாக்குவாய்! எனவே என்னை மீண்டும் மனிதப்பிறவி என்னும் கடலுள் அழுந்தாதபடி இன்பம் தரும் மரக்கலத்தைச் செலுத்தி அதன் வழியாக ஒப்பற்ற முக்தி அளிப்பாய்.

"...... ..........................

**எம்மைப் பிறவிக்கடல் நின் றெழுதர**
**இன்பக் கலம் உய்த்தே**
**ஈடறு வீடெனும் அந்தமில் இன்பம்**
**எமக்குற வேதருவாய்!**

...... ..........................."[56]

என்னும் பாடலில் ஆசிரியர் தனக்கு மனிதப்பிறவி வேண்டாம் என்றும் முக்தி அளிப்பாய் என்றும் கலைமகளிடம் வேண்டுகிறார். மேற்கூறிய கலைமகள் பற்றிய சிறப்புகளை ஆசிரியர் தன்னுடைய நூலில் திரட்டிக் கூறியுள்ளார்.

**கலைமகள் அருள்**

கலைமகளிடம் நூலாசிரியர் அருள் வேண்டும் செய்தியும், அருள் தன்மைகளும் இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். முதிர்ந்த ஞானிகளின் நெஞ்சில் இருக்கும் சோதி போன்றவள்; வினைகளை அழிப்பவள்; யார் என்ன வேண்டும் என்று எண்ணுகின்றனரோ அதனை அவர்களுக்குக் கடல்போன்று அளிப்பவள் கலைமகள்,

> "...... ..........................
> **யாதெவர் எவ்வாறெண்ணுவர் அவ்வா**
> **றேய்ந்த பெருங்கடலே!**
> ........................" 57

என்று கலைமகளின் அருள் குணத்தைப் புகழ்கின்றார்.

**எல்லாம்தான்**

இந்திரன் அனுபவிக்கும் நலம், கயிலையில் இருக்கும் சிவனின் நலம், கண்ணபிரான் விரும்பும் நலம், பிரம்மதேவன் நலம், வெண்மதியின் இன்பம், கதிரவன் வெம்மை என்று,

> "..............................
> **கண்மணி ஆகிய வெண்மதி தன்மையும்**
> **கதிரவன் வெம்மையும் மேல்**
> **கண்டவை யாவும் தானென நின்றருள்**
> **காட்டு கலைத்தெய்வம்**
> ..............................." 58

எல்லாம் தானே எனக்கூறி அருள்புரிபவள் கலைமகள். தன்னை வணங்கும் அடியார்கள் கலைமகளிடம்

வேண்டியது எல்லாம் அளிக்கும் தன்மையானவள் என்பதை,

**''வேண்டிய எல்லாம் வேண்டு மவர்க்கருள்**
**மெய்ஞ்ஞானக் கடலே!**
**......................................... 59**

என்று பாராட்டுகின்றார்.

**கலைமகள் அருள்**

வளமை படைத்த செல்வந்தர்கள், உடற் கட்டமைந்த திருமேனி உடையவர்கள், அருகில் நிகழும் செய்திகளை விரைந்துணரும் அறிஞர்கள், அரச இன்பம் நுகரும் வேந்தர், இவர்கள் அனைவருக்கும் கலைமகளாகிய உன் அருள் இல்லையெனில் மேற் கூறியன யாவும் பயனின்றி ஒழிந்து போகும் எனக் கலைமகள் அருளின் சிறப்பினைக் கூறுகிறார்.60

**பேச்சாற்றல்**

கம்பன் இளங்கோ அடிகள் அருளிய காவியங்கள், திருக்குறள், கலித்தொகை, அகம், புறம், தொல் காப்பியம் இவைகளை நன்கு உணர்ந்து கொண்டும் நம்மாழ்வார் முதல் பெரியவாச்சான் பிள்ளை வரை உரையோடு பிறரின் உரைகளும் சேர்த்து படித்து,ஒழுக் கத்தில் சிறக்கும்படி பிற மொழிகளில் உள்ள கருத்துக் களை அறிந்து அறிஞர்கள் மகிழும்படி பேசுகின்ற பேச்சாற்றலை எனக்கு அருள்க என்று கலைமகளிடம் ஆசிரியர் வேண்டுகிறார். கலைமகளை. எப்போதும் போற்றுபவர்களுக்கு உயர்ந்த இன்பம் அளிப்பவள்

அதை எண்ணி எப்போதும் உன் திருவடிகளை ஏற்கின்றேன் நீ அருள்புரிக61 என்று பொன் ஊசற் பருவத்தில் கலைமகளிடம் அருள் வேண்டுகிறார்.

## சமயப் பொதுமை

நூல் ஆசிரியர் அவர்கள் வைணவ சமயத்தில் மிகுந்த ஈடுபாடும் பற்றும் கொண்டு இருப்பினும், பிற சமயங்களின் மீதும் அன்பு கொண்டிருந்தார். இந்நூலில் காப்புப் பருவத்தில் கலைமகளைக் காக்கும் வண்ணம் சிவபெருமான், திருமால் முதலிய தெய்வங்களை வேண்டுகிறார். பொன் ஊசற் பருவத்தில் பண்டைய சமயங்களான அறு சமயங்களும், புதுச் சமயங்களான பிற சமயங்களும் வாழ்க என்றும் கூறியுள்ளார். வைணவ சமயத்தை மட்டும் என்றும் விளங்கும் வைஷ்ணவம் வாழ்க என்பது வைணவத்தின் மேல் இவருக்கு இருக்கும் தனிப்பற்று விளக்குகின்றது. பிற மதங்களில் உள்ள உயர்ந்த நூல்களைக் கற்று ஒழுக்கத்திற் சிறக்கும் வண்ணம் திகழ வேண்டும் என்பதிலிருந்து இவரின் சமயப்பொதுமைப் போக்கினை உணர முடிகின்றது.62

## புராணச் செய்திகள்

புராணம் என்பது "எது தொன்று தொட்டு இன்று வரைக்கும் பரவி இருக்கின்றதோ அதுவே புராணம் என்று வாயு புராணம் கூறுகிறது."63 புராணம் என்பதற்குப் பழமை என்று பொருள். இந்நூலில் சில புராணச் செய்திகளைக் குறிப்பிட்டிருத்தல் நூலாசிரி

யர்க்குப் புராணத்தில் இருந்த ஆற்றலை வெளிப்படுத்து கின்றது.

பாற்கடலுள் மேரு மலையை மத்தாகவும் நாகத்தைக் கயிறாகவும் கொண்டுஅசுரர்களும், தேவர் களும், கடையும் நாளில் அமுத கலசத்தோடு தோன்றியவள் கலைமகள். திருமால்முன்பு உலகை அளக்க முற்பட்டு திருவடிகள் சிவப்பானது. மடுவில் தாமரை மலரை பறிக்கச் சென்ற யானையை மடுவில் இருந்த முதலை காலைப் பிடித்துவிட்டது. அது வலியால் திருமாலை அழைத்த போது உடனே திருமால் தோன்றி அந்த முதலையை அழித்து யானையின் துயர் நீக்கினான்.65 இத்தகைய புராணச் செய்திகள் கலைமகள் பிள்ளைத் தமிழில் பல உள்ளன.

## சமுதாயச் செய்திகள்

"சமூகம் என்பது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கட் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் 'அமைப்பாகும்"66 என்பர். "சமயம், பண்பாடு, அறிவியல், நாட்டுப்பற்று முதலியவற்றின் அடிப்படையில் சேர்ந்து செயல்பட்டு வாழும் மக்கள் கூட்டத்தினையே 'சமுதாயம்' என அறிஞர் கூறுவர்."67 சமுதாயம் என்பது மக்களின் கூட்டமைப்பே ஆகும்.

நம் நாட்டின் அரசியல் சமுதாயச் சூழ்நிலையாலும் மழையின்மையாலும் விவசாயத் தொழில், பிறதொழில் முறைகளில் நேர்ந்துள்ள மாற்றங்களைத் தம் கருத்தில் கொண்டார். மேலும் விவசாயத் தொழில் செய்த

ஆசிரியர் இக்காலத்தில் விவசாயத் தொழில் செய்வோர் எப்படி வருந்துகின்றனர் என்பதை இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். இதனை,

''மாதம் மூன்று மழை என்பர்
வருடம் மூன்றுமழையும் இன்றி
வையம் வருந்தக் கருவியினால்
மண்ணைத் தொளைத்துப் பாதலம் போய்ப்
போதந் திடுநல்நீர் ஊற்றால்
பொன்னாய் விளையும் பயிர் ஆக்கிப்
பொங்கோ கையிற்கா ரினிற்கடிது
போகி வாழ்வார் தமைக்கண்டு
வேதம் புகல்சொல் எரினொடு
விளம்பும் நுகத்தேரான் உழற்கு
வேண்டும் செய்யுள் பல இருந்தும்
மிக்காம் நல்நீர் இல்லாதுன்
..........................................'' 68

என்னும் பாடலில், முற்காலத்தில் மாதம் மூன்று மழை வரும் என்பார்கள். ஆனால் இக்காலத்தில் வருடத்திற்கு மூன்று முறை கூட மழையில்லை. இதனால் விவசாயத் தொழில் செய்வோர் நீர் இன்றி வருந்துகின்றனர். இந்நிலையில் சமுதாயத்தில் பொருள் வசதி படைத்தோர் மண்ணைத் தொளைக்கும் கருவியின் மூலமாக வரும் நீரைக்கொண்டு கரும்பு போன்ற பணப்பயிர் செய்து மகிழ்ச்சி அடைகின்றனர். இப்பணத்தின் காரணமாக மகிழ்வுடன் உந்து வண்டியில் செல்கின்றனர். பிறர்க்கும் நன்செய், புன்செய் நிலங்கள் இருப்பினும் நீர்இல்லாது நிலங்களை உழுது பயன்பெற முடியவில்லை. எனவே, கலைமகளே அந்த நல்ல நீர் அருளி அன்பொடு வருக என்கிறார்,

இப்போது பருவகாலங்களில் மழை பெய்யாமல் வெயிலின் கொடுமை மிகுதியாக உள்ளது. இதனால் காவிரி, 'தாமிரவருணி, வையை, பெண்ணை முதலிய வற்றாத நதிகள் யாவும் சிறிய உள்ளங்கை நீரும் இன்றி வறண்டு கிடக்கின்றன. இதனை,

"........................—...
**ஆருயிர் களிப்புறக் காலமழை பெய்யாமல்**
**ஆற்ற வெயிற் கொடுமையால்**
**நம்பிவரு பொன்னிநதி பொருநைநதி வையைநதி**
**நளிர் பெண்ணை நதிதமுலதாய்**
**நவில்நதிகள் பலவும் சிருங்கை நீரும் இன்றி**
**நண்ணினோர் மனம் வெதும்ப**
.........................." 69

என்று குறிப்பிடுவர்.

இந்த நதிகளின் நீரை நம்பி உள்ள விவசாயிகள் மனம் வருந்தித் தங்களின் முயற்சியால் துளைக்கருவி கொண்டு துளைத்தும் தண்ணீர் இன்றி வருந்து கின்றனர். அவர்கள் வருந்தி விடும் கண்ணீரும் வெந்நீர் ஆகும். இவர்களின் துன்பத்தைப் போக்க அருள் செய்யும் கலைமகளே! என்று வேண்டுகிறார்.

பணம் படைத்தவர்கள் ஆணவமும் செல்வச் செருக்கும் கொண்டு குபேரன் போல வாழ்கின்றனர். அவர்கள் துளைக்கருவி கொண்டு பொங்கும் நீர் ஊற்று கண்டாலும் அவர்களின் எண்ணப்படி அந்த நல்ல நீரும் வெந்நீருக்குச் சமமாகும். எனவே ஏழை, பணக்காரன் என்று இல்லாது எல்லாரும் மேம்பட்டு வாழ அருள்புரிக என்கிறார். 70

இக்காலத்தில் மின்னலுடன் கூடிய மழை இல்லை. எனவே நீர் இல்லாது பயிர்களும் செழித்து வளரவில்லை. எங்கும் வறட்சியாக இருக்கின்றது. இந்நிலையைக் கண்ட அரசினர்பங்கீடு முதலாய சட்டங்கள்கொணர்ந்து அடக்குமுறை செய்கின்றனர். அறிவும் செல்வாக்கும் உள்ளவர்கள் அச்சட்டத்தையே துணைக் கொண்டு ஆணவம் அடைந்து, பணக்காரர் மேலும் செல்வந்தர் களாகி வாழ்கின்றனர். துன்பத்தில் வாழ்கின்ற ஏழைகள் அந்தச் சட்டத்தின் மூலமே மேலும் துன்பமடைந்து ஏழைக்கும் ஏழையாக வாழ்ந்து வருகின்றனர். இந்த ஏழை மக்களின் வாழ்க்கை நிலையினை நல்லவர்கள் கண்டு கண்ணீர் விட்டு வருந்துகின்றனர். அவர்களின் வருத்தத்தைக் கலை மகளாகிய நீ அறிவாய்! எனவே அவர்களுக்கு அருள்க என்று வேண்டுகிறார்.17 ஆசிரியர் வேளாண்மைத் தொழிலில் ஏற்படும் பிரச்சனைகள் நீர் இல்லாது விவசாயத் தொழிலில் துன்பப்படும் ஏழை விவசாயி களின் நிலை ஆகியவற்றை இச்சமுதாயத்திற்கு எடுத்துக் காட்டுகின்றார்.

## சாதிகள்

இச்சமுதாயத்தில் நடக்கும் சாதி சமயக் கொடுமை களை நீராடற் பருவத்தில் விளக்குகின்றார். உயர்ந்த சாதி, சமயம், செல்வம் இம்மூன்றினால் தம்முடைய வழக்கம், மேன்மை, பெருமை ஆகியவற்றை அறிய லாம் என்று ஒன்றும் அறியாதவர்களாகிய பிடிவாதக் காரர்களின் பிடியில் அகப்பட்டு தம்முடைய உணர்வு களை இழந்து நிற்கின்றனர் கீழ்ச் சாதியினர் என்பதை,

''சாதியொடு சமயமும் செல்வமும் என உலகு
சாற்றவரும் இம்மூன்றனால்
தமதுறு வழக்கமும் மேன்மையும் பெருமையும்
தான் அறியலாகும் என்றே
தரின் உரைத்தபிடி வாதரின் மயக்கினில்
அகப்பட்டு மெய் உணர்விழந்து
அவர் செயும் கொடுமையால் துன்புற்றகீழ்சாதி
அன்னிய மதம் ஏழ்மை என்று
ஓதும் இப்பிரிவினால் துன்புறூ உம் இந்நிலை
யுணர்ந்துணர்ந்துள்ளம் அமிந்தே
உற்ற இத்துயரும் துயர்க் காரணங்களும்
ஒழிவதென் றென்று நைந்தே
மேதையர் விடுத்த கண்ணீரின் உண்ணீர்மைபெற
வெள்ளநீ ராடி யருளே''72

என்னும் பாடலில் விளக்குவர். மேலும்,

உயர் சமூகத்தினரின் கொடுமையாலும், சமய வாதிகள் செய்யும் கொடுமையாலும் கீழ்ச்சாதியினர் அன்னிய மதங்களுக்கு மாறுகின்றனர். இதனால் அன்னிய மதங்கள் வளர்ந்து வருகின்றன. செல்வந்தர்கள் செய்யும் கொடுமையால் வறுமை நிலை கொண்டிருக்கும் கீழ்ச்சாதியினரின் இந்நிலையைச் சமுதாயத்தில் உள்ளவர்கள் உணர்ந்து இந்தத் துன்பங் களால் ஏற்படும் கொடுமைகள் என்று ஒழியுமோ! அன்றுதான் நல்ல நாள் ஆகும் என்ற நல் அறிஞர் களின் வருத்தத்தை ஒழிப்பாயாக என்கிறார்.

இந்நூலாசியர் மேற்கண்ட செய்திகளின் மூலம் சாதி, சமயம், செல்வம், அரசியல், இயற்கை, மழை, விவசாயம் ஆகியவற்றினால் மக்கள் இச்சமூகத்தில் எவ்வாறு வாழ்கின்றனா. எனவும், இச்சமூகத்தில்

நடக்கும் கொடுமைகளும், தீமைகளும் அகல வேண்டும் எனவும் கலைமகளை வேண்டிப் பாடுகின்றார். இதன் வாயிலாக ஆசிரியருக்குச் சமுதாயத்தின்மீது இருக்கும் பற்றினை அறியலாம்.

## பிறமொழிப் புலவர்கள்

இந்நூலில் வடமொழி, தமிழ், தெலுங்கு, மலையாளம் மற்றும் ஆங்கில இலக்கியக் கவிஞர்களைக் குறிப்பிட்டு அவர்களின் சிறப்பினைக் கூறுகிறனார். வடமொழி இலக்கியத்தின் மிகச்சிறந்த அறிஞர்களான வான்மீகர், காளிதாசர், போசர், மைத்திரேயி, வியாசர், பாணினி இவர்களின் வடிவில் கலைமகளாகிய நீ தோன்றி வடமொழி இலக்கியங்களைச் சிறப்படைய செய்தாய், தென்மொழியாகிய தமிழ்ப்புலவர்கள் அகத்தியர், தொல்காப்பியர், திருத்தக்கதேவர், இளங்கோ அடிகள் நம்மாழ்வார், வாதவூர் அடிகள், கம்பர் சேக்கிழார், அரிதாசர் போன்ற இச்சிறந்த அறிஞர்களின் வடிவில் எழுந்தருளி, நற்றமிழ் வளம்பெறச் செய்தாய்73 என்கிறார், எம்மொழியினரும் போற்றும் கவிஞர்களான திருவள்ளுவர், சடகோபர், கம்பர், தெலுங்கு மொழிப்புலவர்களான போதனா, வேமனா, மலையாள மொழிப்புலவர் எழுத்தச்சன், ஆங்கில மொழி அறிஞர்களான செகப்பிரியர், மில்டன், பைரன் போன்றவர்களைப் படைத்தாய்74 என்கிறார். மேற்கூறிய அறிஞர்களின் மூலமாக மற்றவர்கள் மகிழும்படி இலக்கியங்கள் படைக்கச் செய்தவள் கலைமகள். இதன் மூலமாக ஆசிரியருக்குப் பிறமொழி அறிஞர்கள்மீது இருந்த அன்பு விளங்குகின்றது.

# குறிப்புகள்

1. கலைக்களஞ்சியம்—தொகுதி நான்கு
2. அ.ச. ஞானசம்பந்தன் — தமிழும் சமயமும் உ.த.மா. ப. 68
3. கழகத்தமிழ் அகராதி
4. க.பி.த.பா. எண். 11
5. ,, 45
6. ,, 58
7. ,, 85
8. ,, 13
9. ,, 84
10. ,, 2
11. ,, 4
12. ,, 3
13. ,, 6
14. ,, 7
15. ,, 8
16. ,, 9
17. ,, 5
18. ,, 36
19. ,, 46
20. ,, 92
21. ,, 102
22. ,, 12
23. ,, 14
24. ,, 17
25. ,, 18
26. ,, 45
27. ,, 15

60. க.பி.த.பா.எண் 35
61. ,, 65
62. ,, 111
63. கலைக்களஞ்சியம் தொகுதி-4
64. க.பி.த.பா. எண். 84
65. ,, 11
66. கலைக்களஞ்சியம் தொகுதி-4
67. சே. இராசேந்திரன் தமிழ்க்கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம் ப. 168
68. க.பி.த.பா. எண். 68
69. ,, 93
70. ,, 94
71. ,, 95
72. ,, 96
73. ,, 108
74. ,, 109

# 4. கலைமகள் பிள்ளைத் தமிழில் கலைநயம்.

மனிதனின் வாழ்வில் நாகரிகம் வளர, வளர மொழியிலும் கருத்துக்களை உணர்த்தும் முறையிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டன. சிந்தனைத்திறன் பெருகச் சொற்களை அழகாக அமைக்கும் முறைகள் தோன்றலாயின. எனவே, இனிமை உண்டாகும்படி புலவர் பல உத்திகளைக் கையாண்டு எழுதினர். யாப்பு, தொடை நலம், அணிச்சிறப்பு முதலியன பாட்டிலக்கிய உறுப்புகளாயின. மேலை நாட்டார் நோக்கில் கருத்து, உணர்ச்சி, கற்பனை, வடிவம் ஆகியன இலக்கியத்தின் உறுப்புகளாயின. இந்த நான்கு உறுப்புகளும் ஒருங்கே மிகச் சிறந்த புலவர் இயற்றிய இலக்கியத்தில் அமையும் எனலாம்.

## கற்பனையும் கவிதையும்

நுண்கலைகளில் ஒன்று கவிதை. இந்தக்கவிதைக்கு உணர்ச்சி, கற்பனை, வடிவம் என்ற மூன்றும் அடிப்படைத் தேவைகளாகும். இவற்றுள் உணர்ச்சி,

கவிதைக்கு உயிர் நாடியாய் இருப்பதாகும். இந்த உணர்ச்சியைக் கவிஞன் தான் உணர்ந்தவாறு எடுத்துரைக்க முயலுகின்றான். அவை நயமிக்க முறையிலும், கருத்தைக் கவரும் வகையிலும் வெளிப்படுத்துகிறான். அப்படி வெளிப்படுத்தும் போது 'கற்பனை' என்னும் இலக்கியத்திறனைக் கருவியாகக் கொள்கிறான்.

## கற்பனை

ஷெல்லி என்ற அறிஞர் "கற்பனையின் வெளிப்பாடே கவிதையாகும்" 1 என்பர். மேலும் "அந்தக் கவிதையில் படைப்போனின் உணர்ச்சி, படிப்போன் உள்ளத்தில் எழும் ஆற்றல் இருக்க வேண்டும்" 2 என்கிறார் வின்செஸ்டர். சூழ்நிலையினின்று எழும் தூண்டல்கள் பல்வேறு புலன் உறுப்புக்களின் மேல் மோதிப் பல வகையான உணர்வுகளை எழுப்புகின்றன. இவ்வுணர்வுகள் குறிகளாகவும், மொழியாகவும் வடிவங்களாகவும் அமைகின்றன. பல்வேறு வடிவங்களாக அமையும் உளநிலையே 'கற்பனை' எனப்படுகின்றது"3 என்று கலைக்களைஞ்சியம் குறிப்பிடுகின்றது. கவிஞன் தான் கண்ட காட்சிகளை அவ்வாறே சொல்லுவது கற்பனையாகாது.

## கற்பனையின் பயன்கள் வகைகள்

கற்பனையின் விளைவால் இலக்கியத்திற்குக் கவர்ச்சி ஏற்படுகிறது. அணிநலன்கள் அமைகின்றன. குறிப்புப் பொருள்கள் இடம்பெற முடிகின்றன.

உணர்த்தும் பொருளையும் நினைவுக்குக் கொண்டு வரச் செய்கிறது. எனவே, கற்பனை இலக்கியத்திற்கு இன்றியமையாததாகும்.

கற்பனை பற்றி அறிஞர் கூறும்போது அதைப் பொதுவாக உண்மைக் கற்பனை, வெறுங்கற்பனை, கருத்து விளக்கக்கற்பனை என்று கூறுவர். அவ்வாறே வின்செஸ்டர் என்பவரும் கற்பனையை மூன்று வகையாகக் கூறுவர். இவற்றையே ஆராய்ச்சியாளரும் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து, விளக்கக் கற்பனை என்று பாகுபடுத்துகின்றனர்:.

## கலைமகள் பிள்ளைத்தமிழில் கற்பனை

### படைப்புக்கற்பனை

"கவிஞன் தான் வாழ்க்கையில் தனித்தனியே கண்ட பல்வேறு பொருள்களில் சிலவற்றையும், உணர்ந்த உணர்ச்சிகளில் சிலவற்றையும் ஒன்றாக இணைத்துப் புதியதொரு முழுமையான வடிவத்தைப் படைத்துக்காட்டுவதைப் படைப்புக்கற்பனைஎன்பர்"4 இவ்வகைக் கற்பனைகளைக் கலைமகள் பிள்ளைத் தமிழில் காணலாம். முத்தப் பருவத்தில் முதற்பாடலில் வரும்,

**"பண்பெறும் கனிவாயின் வெளிவந்த தீங்குதலை**
**பரிவினொடு கேட்டு வந்து**
**படுசிறைய வண்டினம் பருகுமது மலர்நின்ற**
**பைங்குழற் காடு கண்டு**
**விண்பெறு கருங்குயின் எனாகடு நடுங்கிவாய்**
**மென்கோ கிலப்புள் வெருவ**
**விளங்கும் வெண் தாமரையின் மேவி வாழ்வுற்றாய்**
**விடம்படும் துளை எயிற்றுக்**

கண்பெறும் செவிஅரா நினதழகு சாயிலைக்
காணாப் பசுந்தோகைசேர்
கானமயிலாமென வெருஉக்கொள்ள மேவும் நின்
கட்டழகு சொல்ல வசமோ?
மண்பெறும் புலவர்கள் நிதம்தொழும் கலைமகள்! நின்
மலர்வாயின் முத்தம் அருளே!
மலைமகளும் அலைமகளும் உணரவரு தலைமகள்!நின்
மலர்வாயின் முத்தம் அருளே!''5

என்னும் பாடலில் பண்போன்ற உன்குதலை மொழியைக் கேட்டு வந்த குயில் உன்கரிய கூந்தல் காட்டைக் கண்டு வான்மேகம் என்று நடுநடுங்கி அஞ்சும். உன் அழகிய சாயலைக்கண்டு தோகை மயில் என்று பாம்பும் அஞ்சும். அத்தகைய உன் கட்டழகை உரைக்க இயலுமோ என்று ஆசிரியர் புகழ்ந்துள்ளார். கரிய மேகத்தைக் கண்டால் மின்னல் தாக்குமோ என்று குயில் அஞ்சுவதும், தோகை மயிலைக் கண்டால் தன்னைக் கொத்துமோ என்று பாம்பு அஞ்சுவதும் இயல்பு. இளம் பெண்களின் மொழியைக் குயில்கள் விரும்பும் என்றும், இளம் பெண்களின் சாயல் மயிலைப் போன்றது என்றும் கூறுவது கவிஞர் இயல்பு. இவற்றை ஒன்று கூட்டி ஆசிரியர் இங்கு ஒரு புதிய காட்சியைப் படைத்துள்ளதை அறியலாம். எனவே இக்கற்பனை படைப்புக்கற்பனை எனக் கருதலாம். இத்தகு கற்பனைகள் இந்நூலில் ஆங்காங்கு இடம் கொண்டுள்ளன.6

## இயைபுக் கற்பனை

''ஒத்த உருவத் தொகுதிகளுடைய பொருள் கருத்து, உணர்ச்சி ஆகியவைகளை இயைபுபடுத்திப்

புனைந்துரைப்பது இயைபுக் கற்பனை என்பர்''7 உள்ளத்தில் உறைந்து கிடக்கும் உணர்ச்சிக்குப் பொருத்தமான ஒரு காட்சியைக் காணும் போது இத்தகைய கற்பனை வெளிப்படுகின்றது. கலைமகள் பிள்ளைத் தமிழில் அம்புலிப் பருவத்தில் கீழ்க்கண்ட பாடலில் இயபைுக் கற்பனையைக் காணலாம்.

''எந்தெந்த ராசிக்கும் இன்பாகி வெள்விடையில்
ஏற்றம்மிக் கரைவடிவினோடு
இலங்குமுழ வடிவும் கொடுமைழயேந்தி நிற்றலால்
எழில்மிக்க சிவனை ஒத்தும்
.........................''8

என்னும் பாடலில் எல்லா உயிர்களுக்கு இன்பம் அளித்து வெண்ணிற காளையில் ஏறி, தன் உடலின் ஒரு பகுதியை உமையம்மைக்குக் கொடுத்ததனால் அரை வடிவனாகி எங்கும் பரந்து நிறைந்திருப்பதனால் முழு வடிவினனாகியும் கையில் மானை ஏந்தி இருப் பவன் சிவபெருமான் என்பது ஒரு பொருள். எல்லா இராசிகளிலும் சஞ்சரிப்பவனாக இருந்து இன்பம் அளிப் பவனாகி, இடபராசியில் உச்சம் பெற்றுத் தேய்பிறை யில் தேய்ந்து அரைவடிவினனாகியும் வளர்பிறையில் வளர்ந்து முழு வடிவினனாகியும், தன் உடலில் மான் போன்ற களங்கம் உடையவனாகியும் இருப்பவன் சந்திரன் என்பது வேறொரு பொருள். இவ்வாறு சிவ பெருமானுடன் நீ ஒத்துள்ளாய் என்று இப்பாடலில் நிலவை முன்னிலைப்படுத்திக் கூறுகின்றார். எனவே, நிலவை சிவபெருமானுடன் இயைபுபடுத்திக் கூறு வதால் இப்பாடலில் இயைபுக் கற்பனையைக் காண முடிகிறது. இத்தகு இயைபுக்கற்பனை மேலும் வேறு

சில பாடல்களிலும் கலைமகள் பிள்ளைத் தமிழில் காணப் பெறுகின்றது.

## கருத்து விளக்கக் கற்பனை

"பொருள்கள், உணர்ச்சி, கருத்து முதலியன வற்றிடையே இழையோடிச் செல்லும் சிறப்புமிக்கப் பயன் மதிப்புக்களை உள்ளத்தால் உணர்ந்து அவற்றிற்கு ஒரு கருத்தை விளக்கந்தர முயல்வது9 கருத்து விளக்கக் கற்பனையாகும். இக்கற்பனையில் புலவர் தாம் கண்டவற்றை அப்படியே கூறாமல் தாம் எவ்வாறு உணர்ந்தாரோ அவ்வாறே கூறுவார்.

**"மழையினால் விளியினால் விடலரு முயலினால்**
**மானினால் மாசுண்டு மேல்**
**வளையாத உடலம் வளைந்துகூனாய் அரவின்**
**வாய்விடத் திற்கனுங்கிக்**
**கழையினால் வில்லென வளைத்தம்பெய்ம் மதவேள்**
**கவிக்கப் பிறங்கு டையாய்க்**
**கட்டுரைத் திடல் அரிய துன்பக் கடற்குளே**
**கால்தாழ்ந்து வெள்கு மதியே!**
**பிழையினால் பொலிகின்ற என்பிழை பொறுத்தருள்**
**பெருங்கருணை வாழ்வின் முன்னே**
**பேதாய் விரைந்தோடி விளையாட வந்திடில்**
**பெறலாம் அனைத்து வாழ்வும்**
........................... —"10

என்னும் பாடலைக் கருத்து விளக்கக் கற்பனைக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். மழையாலும், காற்றாலும் நீங்காத முயல்போன்றும், மான் போன்றும் உள்ள களங்கத்தாலும் மாசு அடைந்து வளையாத உடலும் வளைந்து கூனாகி (பிறையாகத்

தேய்ந்து) அரவின் (பாம்பின்) வாய்விடத்திற்கு வருந்தி, மன்மதனுக்குக் குடையாக வளைந்து மேலும் மேலும் கூறமுடியா துன்பக்கடலில் அழுந்தி வருந்தும் நிலவே! நீ கலைமகளிடத்து வந்து வேண்டிக் கொண்டால் உன் துன்பங்கள் அனைத்தையும் போக்கி அருள்வாள் என்பது இப்பாடலின் கருத்தாகும். இங்கு இயல்பான மதியின் தன்மைகளைத் தாம் கூறவந்த கருத்திற்கு ஏற்றவாறு புனைந்துள்ளதை அறியலாம். எனவே இது கருத்து விளக்கக் கற்பனையாகும். இத்தகு கருத்து விளக்கக் கற்பனைகள் மேலும் சில இடங்களில் காணலாம்.11

## கலைமகள் பிள்ளைத் தமிழில் அணிநலன்கள்

கற்பனையின் விளைவால் தோன்றும் உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம், சிலேடை ஆகிய அணிகளும் சிறப்பாக கலைமகள் பிள்ளைத்தமிழில் இடம் பெற்றுள்ளன.

### உவமை விளக்கம்

கவிஞர்கள் தாம் உணர்த்தக் கருதும் கருத்தைச் சிறந்த முறையில் வெளிப்படுத்தப் பல உத்திகளைக் கையாள்வதுண்டு. அவற்றுள் ஒன்றே தக்க உவமைகளைக் கையாள்வது. உவமை என்பது ஒரு பொருளைப் பிறிதொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுதல் என்று கூறலாம். இதனைத் தண்டியலங்கார ஆசிரியர்,

**''பண்புந் தொழிலும் பயனுமென்று இவற்றின்**
**ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்து**
**ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை''12**

என்னும் நூற்பாவினால் பொருளொடு பொருள் புணர்ந்து ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை என்கிறார்.

## உவமையின் சிறப்பும் வகையும்

உவமைகளே புலவர்களின் நுண்மாண் நுழை புலத்தை நன்கு வெளிப்படுத்துகின்றன; ஒரு கருத்தை விளக்கவும் ஒரு பொருளின் உண்மைத் தன்மையை அறியவும் பயன்படுகின்றன. இதனை இளம்பூரணர் "புலன் அல்லாதன புலனாதற்கும் அலங்காரமாகிக் கேட்பவர்க்கு இன்பம் பயப்பவும் உவமைகள் பயன் படுவதாகக் கூறுவர்" 13 உவமை அணி மற்ற அணிகள் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்து பிற அணிகளுக்குத் தாயாகவும் நிலவுகிறது.

முன்னர்க் குறிப்பிட்டது போன்று உவமைகள் வினை, பயன், மெய் என்ற வகையில் தோன்றி னாலும் அவை அமையும் இயல்பினைக் கொண்டு அவற்றைப் பலவகையாக அணிநூலார் கூறுவர். கலைமகள் பிள்ளைத்தமிழில் அதிகமான பாடல்களில் காணப்பெறுவது உவமையணியாகும்.

## கலைமகள் பிள்ளைத் தமிழில் உவமை

இந்நூலில் கலைமகளின் அழகையும், வடிவையும், இயல்பையும் போற்றுமிடத்தில் இந்த உவமை யணிகள் வருகின்றன மேலும் உவமைகளாக ஆசிரியர் கூறும் பொருட்களும் அனைவரும் அறிந்த வையாக இருத்தல் சிறப்பானது ஆகும்,

..........................'' (12)

**சார்ந்ததன் நிறங்கொண்டு மேம்படு பளிங்கின்**
**தகைத்தென்ற திருநிறத்தாள்**
..........................................''14

என்னும் இத்தொடரில் தான் சாரும் பொருளின் நிறத்தைக் காட்டும் பளிங்கு போன்ற நிறத்தைக் கலைமகள் உடையவள் என்று சிறப்பாக உவமிக்கப் பட்டுள்ளாள்.

**''ஒருகோடி சூரியர் உதித்தனைய நின்பதத்**
**துறுசிலம் பொலி செய்தாட**
.......................................''15

என்னும் இத்தொடர் ஒரு கோடி சூரியர்கள் ஒன்றுகூடி ஒளி செய்தல் போன்ற ஒளிவீசும் சிலம்பை அணிந் தவள் கலைமகள் என்று காட்டுகிறது.

''..................................

**செடியாரும் வல்வினைகள் அவையோட நல்குமகள்**
........................................''16

இத்தொடர் கலைமகளின் அருளைப் போற்றுகிறது. அவள் செடிகள் போன்று ஒன்று கூடிச் செறிந்து வளரும் வல் வினைகளை நீக்கி அருள்பவள் என்று உணர்த்துகின்றது.

**''அருகிருக்கும் மயிலைஒத்த**
**அழகும் இயலும் உடையவள்**
**அணியிழைக்கு நிகர் எனச்சொல்**
**அரிய சிறிய இடையவள்**
...................................''

என்னும் இத்தொடர்கள், கலைமகள் மயிலை ஒத்த அழகும் இயலும் உடையவள் என்றும், அணியிழை

போன்ற நுண்ணிய இடையை உடையவள் என்றும் அவள் வடிவைப் புகழ்ந்துரைக்கின்றன.

''பாலும் பால் ஆர் தருகடலும்
பனியும் பனிவெண் மாமதியும்
பாகம் ஒருபெண் குடியிருக்கும்
பரமன் உறையும் பருப்பதமும்
மேலும் மேலும் உயிர்க்கினிதா
விளக்கம் உறும் ஆரா அமுதும்
மென்மைப்பளிங்கும் பெடையனமும்
வியன்நீர்த் துளியற்றிடு புயலும்
நாலென் றுரைக்கும் திசைஎங்கும்
நண்ணி விரிந்த பெரும் புகழும்
நயவஞ்சகமே இல்லாத
நல்லோர் உளமும் போல்நிறத்தாய்''18

என்னும் பாடலில் கலைமகளின் வெண்நிறத்திற்குப் பால், பாற்கடல், பனி, மதி, கயிலைமலை, அமுது, பளிங்கு, அன்னம், நீர் இல்லாத மேகம், புகழ், நல்லோர் உள்ளம் ஆகிய பலவற்றை உவமையாகக் காட்டுவதை அறியலாம். இத்தகைய உவமையை அணி இலக்கண நூலார் பல்பொருள் உவமை என்பர். இந்நூலில் உவமைகள் பல இடங்களில் விரவி வந்து நூலுக்கு அணி சேர்க்கின்றன.19

**உருவகம்**

உவமையும் உருவகமும் ஒரே அடிப்படையில் தோன்றுவன என்றாலும் உருவகம் உவமையைவிட ஆற்றல் வாய்ந்தது. ''உவமையைக் கையாளும் கவிஞன் இருபொருள்களையும் தொடர்பு படுத்தினா லும் அவற்றை வெவ்வேறாகவே காட்டுகிறான்.

உருவகமோ இரண்டினையும் ஒன்றாக்கி விடுகிறது.''20 இதையே தண்டியாசிரியர்,

''உவமையும் பொருளும் வேற்றுமை யொழித்து
ஒன்றென மாட்டின் அஃதுருவகம் ஆகும்'' 21

என்று கூறுவர். உவமைக்கும், பொருளுக்கும் வேற்றுமை தோன்றக் கூறுதல் உவமையணியாகும். இருபொருளையும் வேறு வேறாகக் காணாமல் ஒன்றையே மற்றொன்றாகக் காண்பது உருவக அணியாகும் என்பது இவரின் கருத்து. தொல் காப்பியரும் இவ்வேறுபாட்டைக் கூறுவர்.

''பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பினஃது உவமமாகும்'' 22

என்று தொல்காப்பிய நூற்பா அமைந்துள்ளது. கருத்து நயமும், செவிக்கு இன்ப நயமும் பொருந்திப் பொருளா லும் சொல்லாலும் இந்த உருவகம் அழகுபடுத்தி நிற்கிறது. கவிதை சிறக்க உவமையணி போன்று இதுவும் காரணமாய் உள்ளது. உவமையைக் காட்டிலும் உருவகம் சுருக்கமாய் அமைவதால் கவிதை சிறக்கக் காரணம் என்று கூறலாம்.

## கலைமகள் பிள்ளைத்தமிழில் உருவகம்

இந்நூலில் ஆசிரியர் உருவகத்தைப் பல்வேறு இடங்களில் பயன்படுத்தி உள்ளார். உவமைபோன்றே உருவகமும் கலைமகளின் வடிவையும் அழகு, அருளை யும் பாடுமிடத்தில் வருகின்றன.

"அடியார்கள் படுதுயரம் நனிவீசு பவஇரவும்
அறியாமை என்னும் ஒழியா
ஆயிருளும் ஒருநொடியிலே அகலமிகும் ஒளிய
அழகொழுகும் மெய்ஞ்ஞாயிறே'' 23

என்னும் இப்பாடலில் அடியார்கள் துயரமடையவும், பாவத்தை இரவாகவும், அவர்களின் ஒழியாத அறியாமையைச் செறிந்த இருளாகவும் உருவகித்த தோடல்லாமல் அப்பாவ இரவையும், அறியாமை இருளையும் ஒரு நொடிப் பொழுதில் அகலச் செய்யும் மெய்ஞ்ஞாயிறு கலைமகள் என்று கலைமகளையும் மெய்ஞ்ஞாயிறாக உருவகத்துள்ளமையைக் காணலாம்.

"..............................
நாதத்தினால் உலகெலாம்
நல்லின்ப வாரியின் அழுந்த இசைமீட்டுநின்
நல்லியல் புரைப்பென்கொலோ?
..............................'' 24

என்னும் பாடலில், உலக மக்கள் அடையும் இன்பத்தை வாரியாக (கடலாக) உருவகித்துள்ளார் ஆசிரியர். கலைமகள் தன் வீணை நாதத்தினால் உலக மக்களை இன்பமாகிய கடலில் ஆழ்த்துபவள் என்பது இத்தொடரின் பொருள்.

"..............................
எங்கள் இடுக்கண் எனும் கடல்வற்ற
எழுப்பு தழற்சுடரே!
..............................'' 25

என்னும் இத்தொடரில் இடுக்கண்ணைக் கடலாக உருவகித்துடன் அதை வற்றச் செய்யும் அழற்சுடர் என்று கலைமகளையும் உருவகித்துள்ளமையைக் காணலாம். இத்தகைய உருவகங்களும் உவமைக்கு

நிகராக இந்நூலுள் பல இடங்களில் வந்து நூலைச் சிறப்பிக்கின்றன. 26

## வேற்றுமையணி

வேற்றுமையணி என்பது கூற்றினும், குறிப்பினும் ஒப்புடைய இருபொருளை ஒருபொருளாக வைத்து இவை தம்முள் வேற்றுமைபடச் சொல்லுவதாகும். இதனைத் தண்டியாசிரியர்,

**''கூற்றினுங் குறிப்பினு மொப்புடையிரு பொருள்**
**வேற்று மைப்படவரின் வேற்றுமையதுவே''27**

என்று குறிப்பிடுகின்றார். கலைமகள் பிள்ளைத்தமிழில் அம்புலிப்பருவத்தில் முதலில் வரும் மூன்று பாடல்கள் அம்புலிக்கும் கலைமகளுக்கும் உள்ள ஒற்றுமைகளைக் கூறுகின்றன. நான்கு ஐந்து ஆறாவது பாடல்கள் அம்புலிக்கும் கலைமகளுக்கும் உள்ள வேற்றுமை களைக் கூறுகின்றன. எனவே, இம்மூன்று பாடல் களில் வேற்றுமையணியைக் காணமுடிகிறது. கலை களைப் புகழ்ந்தும், நிலவை இகழ்ந்தும் கூறுவதாக இப்பாடல் அமைந்திருப்பதால் இவ்வேற்றுமையணி உயர்ச்சி வேற்றுமையணி வகையைச் சாரும்.

**''இரவதனில் ஒளிர்வைநீ; இருள்இரவி னோடுபகல்**
**எனல்இன்றி என்றும் ஒளிர்வாள்.**
**எழில்தா மரைக்கத வடைப்பைநீ; இவள் அன்பர்**
**இதயதா மரைதிறப்பள்**
**பெருகுமா னார்களங் கம்பெற்று வலம்வருவை**
**பெரிதும்நீ இவளோஎனில்**
**பேணும்மா னார்களங் கம்போக்கி வலம்வருவள்**
**பேசும்நீ லாம்பரத்தால்**

**கருகுறுவை நீ;வெண் துகிற்பெற விளங்கும்இவள்**
**காண்இத் திறத்தினால்உன்**
**காட்சியினும் இவள்மாட்சி மேலாகும் ஆதலால்**
**கடிதிவள் வருந்துறாமே**
**அருவுருவம் ஆகிநில வுலகில்ஒளி தரும் அமுதொ**
**டம்பிலி; ஆட வாவே!**
**அறிவினொடு மலரயனும் உணரவரு கலைமகளொ**
**டம்புலீ! ஆடவாவே!** 28

என்னும் பாடலில் அம்புலி! நீ இரவில் மட்டும் விளங்கு வாய். இவள் இரவு பகல் என்பதின்றி எப்போதும் விளங்குவாள். உன்னைக் கண்டால் தாமரையின் இதழ்கள் குவியும். இவளைக் கண்டால் அன்பர்தம் இதயத்தாமரையின் இதழ்கள் விரிந்து மலரும். நீ மான் போன்ற களங்கம் பெற்று, வலம் வருவை இவளோ மகளிரது களங்கம் போக்கி வலம் வருவள். நீல ஆடையால் நீ கருகுவை வெண்துகில் பெற்று விளங்குவாள் இவள். இவற்றால் உன் காட்சியினும் இவள் மாட்சி மேலாகும். ஆதலின் இவள் வருந்தாமல் விரைந்து, அருவமும் உருவமுமாகி நிலவுலகில் ஒளி தரும் அமுதாகிய அறிவும் அயனும் உணரவரும் கலைமகளோடு ஆட வருவாயாக என்று கலைமகளை உயர்த்தியும் நிலவைத் தாழ்த்தியும் உரைப்பதைக் காணலாம்.

## சிலேடையணி

ஒருவகையாக நின்ற தொடர், சொல் பல பொருள் களது தன்மை தெரிய வருவது சிலேடையாகும். இதனைத் தண்டியாசிரியர்,

**''ஒருவகைச் சொற்றொடர் பல பொருட் பெற்றி**
**தெரிதர வருவது சிலேடையாகும்''** 29

என்று கூறுகின்றார். அவர் குறிப்பிடும் செம்மொழிச் சிலேடை, பிறமொழிச் சிலேடை என்ற இருவகையால் அமைந்த சிலேடை அணிகளும், கலைமகள் பிள்ளைத் தமிழில் உள்ளன. நிலவுக்கும் கலைமகளுக்கும் ஒப்புமை கூறுமிடத்து இவ்வணியைக் காணலாம்.

**''நிறைமதித் தெய்வம் எனலால், மகிழ்வின் மேவலால்**
**நிலவும்ப ரவை மோகமாய்**
**நெடிதோகை அலையெறிய எழுதலால், இரவகல**
**நீள் ஒளி பரப்பிடுதலால்**
**தறைமதிக் கும்தவப் பெரியார்கள் வருவதால்**
**தன்மையொடு வெண்மை மிகலால்**
**தனக்குவமை இல்லாத வரைநேடி லுடலால்**
**தன்னைஒப் பாவை என்னாப்**

**பிறைமதிக் குறுநுதலின் என் அம்மை நின்னொடு**
**பிணைந்துவிளை யாட எண்ணிப்**
**பிரசம் துளிக்குறு மலர்க்கரம் காட்டி உறு**
**பெண்ணீர்மை கண்டுகந்தே**
**அறைமதிக்குப் பெரிய வரைமதித்திடும் அமுதொ**
**டம்புலீ! ஆட வாவே!**
**அறிவினொடு மலரயனும் உணர வருகலைமகளொ**
**டம்புலீ! ஆட வாவே!''**

என்னும் பாடலில் மதித்தெய்வம், மகிழ்வுடையவன், விளங்கும் பரவை (கடல்) கையாகிய அலைவிளங்க வெளிப்பட்டுத் தோன்றுதல், தவத்தில் பெரியாராகிய அத்திரிமுனிவரது கண்ணில் பிறத்தல், இரவு நீங்க ஒளி செய்தல், தன்மையும், வெண்மையும் உடையனாதல் உவமையில்லாத (மேரு) வரையைச் சுற்றுதல் என்று நிலவையும் கூறுதலைக் காணலாம். மதிக்குரிய தெய்வம், மகிழ்வின் விளங்குதல், நிலவு உம்பர் அவை (தேவசபை) என்றும் அலைவீசத் தோன்றுதல், இருள்

நீங்க ஒளிவீசல், தவத்தால் பெரியாரிடம் வருதல், தண்மையும் வெண்மையும் உடையளாதல், உவமை யில்லாத நல்லவரைத் தேடி அவர்கள்பாற் செல்லுதல் என்று கலைமகளையும் ஒரே பாடலில் ஒப்பிட்டுள்ளார். இப்பாடலில் வரும் சொற்கள் பொருளுக்காகப் பிரித்தறி யும்படி இல்லாமையால் இச்சிலேடையணி செம்மொழிச் சிலேடையணியின் வகையைச் சாரும். இந்நூலில் வேறு சில பாடல்களிலும் சிலேடையணி காணப்படுகின்றன.

## தற்குறிப்பேற்றவணி

பெயரும் பொருளும், பெயராத பொருளுமென்றும் இப்பொருட்கண்ணும் இயல்பாக நிகழும் தன்மை யொழியக் கவி தான் கருதிய வேறொன்றினை அவற்றின்கண் ஏற்றிச் சொல்லுவது தற்குறிப் பேற்றவணியாகும். இதனைத் தண்டியாசிரியர்

**''பெயர் பொருள் பொருளெனவிரு பொருளினும்**
**இயல்பின் விளைதிறனன்றிய யலொன்று**
**தான் குறித் தேற்றுதல் தற்குறிப்பேற்றம்''32**

என்று குறிப்பிடுவர். இத்தகைய தற்குறிப்பேற்ற வணியும் கலைமகள் பிள்ளைத்தமிழில் உள்ளது. அம்புலிப் பருவத்தில் வரும்

**''வெள்ளிப் பொருப்பினின் வெள்ளிவிடையினில் ஏறி**
**வெண்பொடிப் பூசு விரகன்**
**வெள்ளநீர் வேணியங் காட்டில் வெண்திரையால்**
**மிதப்புண்டும் அலையுண்டும் நல்**
**புள்ளிப் பணாடவியின் கெட்டரா அங்காந்த**
**போதினில் வெருஉக் கொண்டு சூழ்**
**புனலினில் ஒதுங்கும் நின் அற்பவாழ்வியாவையும்**
**போக்கிநல் வாழ்வருளுவாள்**
**....................................''33**

என்ற பாடலில் இவ்வணி அமைந்துள்ளதைக் காண லாம். நிலவை இகழ்ந்தும் கலைமகளைப் புகழ்ந்தும் உரைக்க எண்ணிய ஆசிரியர், தம் கருத்திற்கு ஏற்ற வாறு சிவன் முடியில் இயல்பாக இருக்கும் நிலவை நோக்கி அம்புலி! நீ சிவபிரானின் சடைகாட்டில் பாயும் கங்கையின் திரையால் மிதந்தும் அலைந்தும், அந்தச் சடைக்காட்டில் திரியும் பணங்கள் மிக்க பாம்புகள் உன்னை விழுங்க வாய்திறந்தபோது பயந்து புனலில் ஒதுங்கியும் அற்ப வாழ்வு வாழ்கிறாய் என்று கூறு கிறார். இவ்வாறு தன் குறிப்பிற்கு ஏற்றவாறு ஆசிரியர் சிவன் தலைமுடியில் இயல்பாக வீற்றிருக்கும் நிலவை இகழ்ந்து கூறியுள்ளதால் இதனைத் தற்குறிப்பேற்றம் எனலாம் இத்தகைய தற்குறிப்பேற்றவணிகள் வேறு சில இடங்களிலும் வருகின்றன.[34]

**ஓசைநயம்**

ஒலிகள் அளவாலும், தன்மையாலும், முயற்சி யாலும் வேறுபட்டு ஒழுங்காக அமைந்து, வந்த அமைப்பே திரும்பத் திரும்பவும் வந்து இன்பம் பயப்பது ஓசை நயம் எனப்படும். ஓசைநயம் இல்லாத கவிதை கவிதையாகாது. இசையுடன் நினைப்பதே கவிதை என அறிஞர் குறிப்பர். உணர்ச்சியை உயிராக உடைய பாட்டுக்கு ஓசை நயம் இன்றியமையாததாகும். வெறுஞ்சொற்களால் கருத்துகளை மட்டுமே விளக்க முடியும். புலவரின் உண்மையான உணர்ச்சி அனுபவத்தை விளக்கும் ஆற்றல் அந்தச் சொற்களுக்கு இல்லை. அத்தகைய சொற்களின் வாயிலாக உணர்ச்சி புலப்படும்போது ஓசைநயம் வந்து உதவுகிறது. ஓசை நயம்இல்லாமல் புலவரின் உணர்ச்சி அனுபவம் பாட்டில் சொற்களில் வருவதில்லை. இத்தன்மையிலேயே

கலைமகள் பிள்ளைத் தமிழில் பாடல்கள் அமைந் துள்ளன. இந்நூலில் பொருள் பொதிந்த சொற்களுடன் இனிய ஓசையும் சப்பாணிப் பருவத்தில் முதற்பாடலில் இணைந்து விளங்கக் காணலாம்.

''கல்விஅறி வில்லாத புல்லருடை நெஞ்சம்
கலங்கித் தளர்ந்து கொட்டக்
கற்றவர் மனத்தொளிரும் அற்புதம் எனத்தகைய
களிஓசை நின்று கொட்டச்
செல்வமது செல்வமோ? கல்வியே செல்வச்
சிறப்பென மகிழ்ச்சி கொட்டத்
திருமேனி மிசைவந்த வியர்வான தொனிமண்டு
தெண்முத்தம் என்று கொட்ட
அல்லலுறும் அமுதென்ன மல்லல்உறு சுவை மன்னும்
அணிவாயின் ஊறல் கொட்ட
அங்கண்மா ஞாலத்திலங்குபா வையர்எலாம்
ஆனந்த வாரி கொட்டத்
..............................''35

என்னும் பாடலில், கல்வியும் அறிவும் இல்லாத அற்பர் களின் நெஞ்சம் கலங்கவும், கற்றோர்தம் நெஞ்சில் விளங்கும் அற்புதம் இவை என்னும் வண்ணம் களிப் பாகிய உவகை மிகவும், நாம் மதிக்கும் செல்வம் செல்வ மல்ல, கல்விதான் சிறந்த செல்வம். சப்பாணி என்பது இரண்டு கைகளையும் சேர்த்துக் கொட்டுதல் ஆகும். குழந்தையைச் சப்பாணி கொட்டுமாறு வேண்டிச் சப்பாணி கொட்டும் ஓசைக்கு ஏற்ப சந்தம் அமைத்து அந்தச் சந்தமே மீண்டும் மீண்டும் வரும்படி பாடலைப் புனைந்துள்ளமையைக் காணலாம். மேலும் ஓசைநயம் இந்நூலில் பல்வேறு பாடல்களில் இடம் பெற்றுள்ளன.36

**வடிவம்**

கவிஞன் தன் உணர்வுகளை அனுபவத்துடன் கற்பனையும் கலந்து பிறரும் உணரத்தக்க வகையில் மொழியைத் தரும் பொழுது இலக்கியமாகின்றது. இந்த இலக்கியம் செய்யுள் நடையிலும், உரைநடையிலும் அமையலாம். இவற்றுள் பிள்ளைத்தமிழ் நூல்கள் செய்யுள் நடையில் அமைந்துள்ளன. பாவகையால் அமைந்திருக்கும் இலக்கியங்கள் சுவையுணர்வுகளின் வேறுபாட்டிற்கேற்ப ஒலிநயம் பெற்றுத் திகழும். தொடைநயம் பெற்றுச் சிறக்கும். இவையே இங்கு வடிவம் என்ற தலைப்பில் கூறப்படுகின்றன.

பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் விருத்தங்களால் பாடப்படுவதாகும். கலைமகள் பிள்ளைத்தமிழில் சடகோபர் காப்புச் செய்யுள் வெண்பாவிலும், அதைத் தொடர்ந்து வரும் பழிச்சினர் பரவல், காப்புப் பருவம் முதற்கொண்டு பொன்ஊசற் பருவம் முடிய உள்ள பாடல்கள் அனைத்தும் ஆசிரிய விருத்தத்தில் அமைந்துள்ளன. இப்பாடல்கள் அனைத்தும் அறுசீர் முதற்கொண்டு பதினான்கு சீர் வரை உள்ள ஆசிரிய விருத்தப்பாக்கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

# குறிப்புகள்

1 P.B. Shelly-the selected poetry and prose of poetry P. 494.
2. C.T. Winchester-Some Principles of Literary Critiesm P. 118.
3. கலைக்களஞ்சியம், தொகுதி 10
4. இ. சுந்தர மூர்த்தி திருக்குறள் அணிநலன் ப. 7.
5. க.பி.த.பா.எண், 51
6. ,, 90,110
7. ,, 74
8. ,, 42,72
9. க.த. திருநாவுக்கரசு திருக்குறளில் கற்பனை திறனும் நாடக நலனும் ப. 83
10. க.பி.த பா. எண் 79
11. ,, 53,77,78,81
12. தண்டி நூ 81
13. தொல் உவமையியல் நூ. 272
14. க.பி.த.பா.எண் 9
15. ,, 21
16. ,, 22
17. ,, 70
18. ,, 33
19. ,, 4,15,17,18
20. க. கைலாசபதி இ. முருகையன் கவிதை நயம் ப. 20

| | | |
|---|---|---|
| 21. | தண்டி நூ. | 36 |
| 22. | தொல். உவமவியல் நூற்.9 | |
| 23. | க.பி.த.பா. எண். | 22 |
| 24. | ,, | 54 |
| 25. | ,, | 60 |
| 26. | ,, | 6,9,15,16 |
| 27. | தண்டி நூ. | 49 |
| 28. | க.பி.த.பா. எண். | 75 |
| 29. | தண்டி நூ. | 76 |
| 30. | க.பி.த பா. எண். | 73 |
| 31. | ,, | 68,76,77 |
| 32. | தண்டி நூ. | 54 |
| 33 | க.பி.த.பா. எண். | 78 |
| 34. | ,, | 52,81,108 |
| 35. | ,, | 41 |
| 36. | ,, | 25,36,42 |

# முடிவுரை

ஆய்வேட்டில் ஆராயப்பட்ட செய்திகளின் ஒட்டு மொத்தமான உண்மைகளும், ஆய்வின் பயன்களும் இங்கு முடிவுரையாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

முதல் இயலால் கி. வேங்கடசாமி ரெட்டியார்—பதிப்பாசிரியர், கட்டுரையாசிரியர், உரையாசிரியர் ஆய்வாளர் ஆகத் திறன்பெற்றவர் என்பது அறியப்படுகின்றது. ஆசிரியரின் கலைமகள் அந்தாதி என்னும் நூல் இளம் வயதில் அவருக்கு ஏற்பட்ட சமயப்பற்றின் புலமையைவெளிப்படுத்துகிறது. மாதர் நீதிக் கலிவெண்பா என்ற நூல் சமுதாயத்தில் உள்ள பெண்களின் வாழ்க்கை நலன் மீது அவருக்குள்ள ஈடுபாட்டினையும், 'காந்தியடிகள் நெஞ்சு விடுதூது' என்ற நூல் அவர்தம் நாட்டுப்பற்றினையும், வேதாந்த தேதிகர் சதகம், வேணுகோபாலன். பதிகம் என்ற நூல்கள் அவர்தம் சமய அறிவினையும் வெளிப்படுத்துகின்றன.

இவ்வாய்வேட்டின் இரண்டாவது இயல் கலைமகள் பிள்ளைத்தமிழ் நூல் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று என்பதையும், பிள்ளைத்தமிழ் இலக்கணத்துக்கு ஏற்றவாறு அமைந்துள்ளது என்ற செய்தியையும், பிள்ளைத்தமிழ் நூல்களில் சிறந்த ஒன்றாக இந்நூல் திகழ்தலையும் உறுதிப்படுத்துகிறது.

மூன்றாவது இயலால் சமயம் சமுதாயம் பற்றிய இவருடைய முன்னேற்றக் கருத்துக்கள் வெளிப்படுத்தப் படுகின்றன. இவர் சமயப் பொது நோக்குடையவர் என்ற உண்மை இந்நூலால் அறிய முடிகிறது. கலைமகள்

பிள்ளைத்தமிழ் நூலில் வைணவ சமயச் செய்திகளும் ஆங்காங்குச் சைவ சமய செய்திகளும், பிற தெய்வச் செய்திகளும் இடங்கொள்கின்றன. இவருடைய நூலில் பெரும் பாலும் வைணவச் செய்திகள் புகுந்துள்ளமை நோக்க இவர் வைணவச் சமய நெறியினை மேற்கொண்டவர் என்று கருத வாய்ப்புள்ளது. எனினும் பிற சமயத்தை எங்கும் தாழ்த்திக் கூறவில்லை.

ஒருவன் தனக்கு என்று ஒரு சமயத்தை வரையறுத்துக் கொண்ட பிறகு அந்தச் சமய நெறியிலேயே தொடர்ந்து இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவன் சமுதாயத்தில் வாழும் வகையில் வாழத் தெரிந்து கொள்ளும் பக்குவ நிலையைப்பெற முடியும். அவ்வாறு இன்றி அடிக்கடி சமயத்தை மாற்றிக் கொண்டிருந்தால் அவன் எந்நெறியிலும் முழுமையைப் பெற முடியாது வாழும் வகை அறியாதவனாய் அமைதலோடு, தன் வாழ்க்கையையும் பாழ்படுத்திக் கொள்கிறான்.

இவர் இந்து சமயத்தில் பற்றுடையவர் காரணம்இந்திய மக்களாகிய நமக்கு முழுமையான வழி நெறிகளை இந்து சமயம் கொண்டு திகழ்கிறது என்பது இவர்தம் கருத்து.

சமுதாயத்தில் இருப்பவர், இல்லாதவர், உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வேறுபாடு நீங்கி, சமநிலையை இவர் விரும்புதலை இந்த ஆய்வால் அறிகிறோம். அரசியல் மக்களின் நலத்தை நாடுவதாய் அமையவேண்டும் என்பது இவருடைய ஆவல். ஆசிரியர் உழவுத்தொழில் செய்வோரின் துன்பங்களை அறிந்திருப்பதோடு அந்தப் பிரச்சனைகளைத் தீர்க்க அரசியல் முன்வரவேண்டும் என்ற தம் விருப்பத்தை நூலில் படைத்துச் செல்கின்றார்.

நான்காவது இயல் ஆசிரியரின் கலை ஆற்றலை வெளிப் படுத்துகின்றது. இவர் இயல்பாகவே கலையைப் படைக்கும் திறனும், கலையை அனுபவிக்கும் உள்ளமும் உடையவர், என்ற உண்மையை இந்த ஆய்வு நிறுவுகிறது. இதன்

வழி இவர் சிறந்த கற்பனை உள்ளம் உடையவர் என்று தெரிகிறது. பொதுவாகச் செய்திகளுக்கு வண்ணம் கொடுக்காமல் உள்ளவாறே கூறினால் அவை எடுபடா. அவற்றுக்கு வண்ணம் கொடுத்து, கலை அழகுபடுத்திப் படிப்போர் ஆர்வம் கொள்ளும் வகையில் படைத்தால்தான் அவை பயனுள்ளவையாக அமையும். ரெட்டியார் அவர்கள் தாம் எடுத்துரைக்க எண்ணிய கருத்துகளை யாப்பு, அணி அழகு அமைத்து இயற்றியுள்ளமை இவ்வாய்வேடு உணர்த்துகிறது.

மொத்தத்தில், இவர் செம்மையான வாழ்வு நெறியை மேற்கொண்டு பிறர்க்கும் தம் நெறியை உணர்த்தி நிறைவான மனநிலையைக்கொண்டு திகழ்ந்தவர் என்பதும், சமயநெறியிலும் சமுதாயத்திலும் பிறர்க்கு எடுத்துக் காட்டாய்த் திகழ்ந்தார் என்பதும், கருத்துகளைக் காட்டுவோராக மட்டுமின்றிக் கவிஞராகவும் திறன் பெற்றவர் என்ற செய்தியும் இவ்வாய்வேட்டால் அறிகிறோம்.

## துணை நூற்பட்டியல்


அருணாசலம், ப. — பக்தி இலக்கியம், பாரி புத்தகப்பண்ணை, இரண்டாம் பதிப்பு. 1983 சென்னை.

— — வைணவ சமயம், பாரி புத்தகப்பண்ணை சென்னை.

அன்னிதாமசு இ (ப.ஆ.) — பிரபந்தத்திரட்டு; உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை 1980.

ஆசிரியர் குழு — சிற்றிலக்கண நூற்றிரட்டு, கழகம் 1964. சென்னை.

— — சிற்றிலக்கிய சொற்பொழிவுகள், இரண்டாவது மாநாடு 1954. கழகம் சென்னை.

இராசேந்திரன், சே. — தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், பூமணி பதிப்பகம் 1985. சென்னை,

| | |
|---|---|
| ஏகநாதசன். ப.ச. | தமிழில் உவமை<br>தரங்கை பப்ளிசிங் அவுஸ்,<br>சென்னை 1978. |
| ஐயனாரிதனார் | புறப்பொருள் வெண்பாமாலை,<br>பொ.வே. சோமசுந்தரனார்<br>(உ.ஆ.)<br>கழகவெளியீடு 1971.<br>சென்னை. |
| கைலாசபதி. க.,<br>முருகையன். இ. | கவிதைநயம்,<br>பாட்டாளிகள் வெளியீடு,<br>இரண்டபம் பதிப்பு 1976.<br>சென்னை. |
| சண்முகம். செ. வை.<br>(ப.ஆ.) | சுவாமி நாதம்,<br>அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,<br>அண்ணாமலை நகர், 1976. |
| சண்முகம்பிள்ளை. மு. | சிற்றிலக்கிய வளர்ச்சி,<br>மணிவாசகர் நூலகம்,<br>சிதம்பரம் 1981. |
| சந்திரசேகரன்<br>(தொ ஆ.) | பிள்ளைத்தமிழ்க் கொத்து<br>சென்னை பல்கலைக்கழகம்,<br>சென்னை 1956. |
| சாம்பசிவனார். ச<br>(உ.ஆ.) | கண்ணன் பிள்ளைத்தமிழ்,<br>பூமகள் புத்தக நிலையம்,<br>சென்னை 1971. |
| சாமிநாதையவர்கள்<br>உ.வே. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்<br>பிரபந்தத்திரட்டு<br>திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து<br>வெளியீடு,<br>மூன்றாம் பதிப்பு 1932. |

சுந்தரமூர்த்தி இ. — திருக்குறள் அணிநலன்
மு. வரதராசன் (பொ.ப.ஆ)
சென்னை பல்கலை கழகம்,
சென்னை 1971.

சுப்பிரமணிய தேசிகர் (உ.ஆ.) — தண்டியலங்காரம்,
கழகம். 1963,
சென்னை.

சுப்ரமணியன் ச வே. — தமிழ் இலக்கிய வகையும் வடிவும்
தமிழ்ப்பதிப்பகம்,
பெருங்குடி சென்னை 1984.

சுப்பிரமணியன். ச வே. — பிரபந்ததிபம்,
தமிழ் பதிப்பகம்,
சென்னை 1980.

சுப்பிரமணியன் ச.வே. அன்னிதாமசு (ப. ஆ.) — பிரபந்ததீபிகை,
உலகத்தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை 1982.

சுப்பிரமணியன். ச. வே. (ப.ஆ.) — தொன்னூல் விளக்கம்
தமிழ்ப்பதிப்பகம்,
சென்னை 1978.

சுப்புரெட்டியார். ந. (ப.ஆ.) — திருக்குறள் கருத்தரங்கு மலர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்,
திருப்பதி 1974.

செயராமன். ந வீ. — பாட்டியலும் இலக்கிய வகைகளும்,
இலக்கியப் பதிப்பகம்,
சென்னை 1981.

— — சிற்றிலக்கியச் செல்வம்,
மணிவாசகர்நூலகம்,

இரண்டாம் பதிப்பு 1979,
சிதம்பரம்.

— சிற்றிலக்கிய திறனாய்வு
இலக்கியப் பதிப்பகம்,
சென்னை 1980.

— பாட்டியல் திறனாய்வு,
மணிவாசகர் நூலகம்.
சிதம்பரம் 1977.

சௌந்தரபாண்டியன் எஸ். தமிழில் பிள்ளைத்தமிழ்
இலக்கியம்,
ஸ்டார் பிரசுரம்,
சென்னை 1989.

ஞானசம்பந்தன் அ.ச. இலக்கியக்கலை,
கழக வெளியீடு,
சென்னை 1964.

தர்மாரெட்டி நா. திருவள்ளுவர் வேமனர்-ஓர்
ஒப்பாய்வு,
திருவேங்கடவன் பல்கலைக்
கழகம்,
திருப்பதி 1985.

க.த. திருநாவுக்கரசு திருக்குறளில் கற்பனைத்திறனும்
நாடக நலனும்,
திருக்குறள் ஆராய்ச்சிப்பகுதி,
எண். 5 ந. சஞ்சீவி (பொ.ப.ஆ.)
சென்னை பல்கலைக்கழகம் 1993
சென்னை.

தொல்காப்பியர் தொல்காப்பியம்,
இளம்பூரணர், கழக வெளியீடு,
சென்னை 1971.

| | |
|---|---|
| சி. பால சுப்பிரமணியன் | கட்டுரை வளம், பாரி நிலையம், சென்னை. |
| முத்து சண்முகம் நிர்மலா மோகன் | சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வகையும், முத்துப்பதிப்பகம், மதுரை 1979. |
| முத்துராசன். கு. | பிள்ளைத்தமிழ் இலக்கியம், மணிவாசகர் பதிப்பகம், |
| — | சைவ சமய பிள்ளைத்தமிழ் நூல்கள் ஒரு திறனாய்வு வசந்தசெல்வி பதிப்பகம், தருமபுரி 1988 |
| — | இலக்கிய வடிவங்கள், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம் 1984 |
| — | சிற்றிலக்கியச் சிந்தனைகள், தேன்தமிழ்ப் பதிப்பகம், சேலம் 1980. |
| வரதராசன் மு. | இலக்கியத்திறன், பாரி நிலையம், இரண்டாம் பதிப்பு-1965, சென்னை. |
| வரதராசன் மு. | இலக்கிய மரபு, பாரி நிலையம், இரண்டாம் பதிப்பு 1968 சென்னை. |
| வேங்கடசாமி ரெட்டியார் | கலைமகள் பிள்ளைத்தமிழ், பாரி நிலையம், சென்னை 1981. |

— மகாத்மா காந்தியடிகள் நெஞ்சு
விடு தூது;
பாரி நிலையம்,
இரண்டாம் பதிப்பு 1982,
சென்னை.

— ஸ்ரீ வேதாந்த தேசிகர் சதகம்,
ஸ்ரீமத். ஏ.வே. இராமானுஜ
நாவலர் சபை.
பண்ருட்டி. 1965.

— மாதர் நீதிக் கலிவெண்பா.
வி. பூதூர்,
வளவனூர் (வழி) 1933

— திருக்கண்ணபிரான் திருப்பதிகம்,
வி. பூதூர்.
வளவனூர் [வழி] 1961.

— வில்லி பாரதத்தில் வினோதத்
திருத்தங்கள்,
வி.பூதூர்,
வளவனூர் [வழி] 1962

— நாலாயிர திவ்விய பிரபந்தம்,
(ப.ஆ.) திருவேங்கடத்தான்
திருமன்றம்,
மூன்றாம் பதிப்பு 1987,
சென்னை.

— கலைக்களஞ்சியம்,
தொகுதி மூன்று, நான்கு, பத்து
தமிழ் வளர்ச்சிக்கழகம்.
சென்னை.

Shally P.B. — The Selectod Poetry and Prose of Poetry, Carlos Baker, The Modern Literary Newyork 1951.

Winchester, C.T. — Some Principles of Literary Criticsm, Mac Million co. 1960, London.

